# நாரநா சீவ வாதக் கட்டளை

தவத்திரு சேஷாத்திரி சிவனார் அருளியது



எளிய தமிழ் விளக்கம்

சுவாமி பிரபஞ்சநாதன்

ஸ்ரீ குருப்யோ நம:

ஓம் ஸ்ரீ பரமாத்மனே நமஹ

# நாநா சீவ

# வாதக் கட்டளை

ஆசிரியர்:-

## தவத்திரு சேஷாத்திரி சிவனார் சுவாமிகள்

எளிய தமிழ் விளக்கம்

## சுவாமி பிரபஞ்சநாதன்

ஸ்ரீ குருப்யோ நம:

ஓம் ஸ்ரீ பரமாத்மனே நமஹ

**தந்தைதாய் ஆவானும் சார்கதிஇங் காவானும்**

**அந்தமிலா இன்பநமக் காவானும் - எந்தம் உயிர்**

**தான் ஆகுவானும் சரணாகுவானும் அருட்**

**கோனாகுவானுங் குரு.**



**நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து**

**நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்கள்**

**எல்லா உயிர்க்கும் இறைவனே ஆயினும்**

**கல்லார் நெஞ்சத்து காண ஒண்ணாதே.**

# நாநா சீவ வாதக் கட்டளை

**(தவத்திரு சேஷாத்திரி சிவனார் அருளியது)**

## நூல் விளக்கம்

இந்த நூலின் தலைப்பு **“நாநா சீவ வாதக் கட்டளை”** என்று இருப்பதற்குக் காரணம், ஆன்ம சொரூபமான தன்னிடத்தில் அறியாமையினால், தன்னை, கர்தா, போக்தா, ஞாதா என்றவாறு, அதாவது செயல் செய்பவன், செயலை அனுபவிப்பவன், அனைத்தையும் அறிந்தவன் என்ற பல வாறான (நாநாவித) சீவ தத்துவங்களை தன் மீது ஏற்றி வைத்துக் கொண்டு, தன்னை ஆணவம், கன்மம், மாயை போன்ற மலங்களினால் சூழப்பட்டு, தன் உண்மை சிவ சொரூபத்தை பிரகாசிக்க முடியாமல் களிம்பு ஏறிய களங்கத்துடன் சீவர்கள் காணப்படுகின்றார்கள்.

எவ்வாறு, தங்கம் போன்று பளபளப்பாக மின்னக்கூடிய பிரகாசமான செம்பு, களிம்பு ஏறியவுடன் கறுத்து காணச் சகியாதவாறு, தன் உண்மைப் பிரகாசமான, இயல்பு சொரூபத்தை இழந்து காணப்படுகின்றதோ, அவ்வாறே இந்த சீவர்களும் அறியாமையினால் தங்கள் மீது ஏற்றி வைத்துக் கொண்ட பலவாறான மலங்களினால், தங்கள் உண்மையான

சுயம் பிரகாசத்தை இழந்து, ஏறிய களிம்பினால் களங்க மடைந்து காணப்படுகின்றனர்.

எவ்வாறு, ஒரு உலோகமான செம்புவில் களிம்பு ஏறிய அழுக்கினை வேதி வினைக்கு உட்படுத்தும் பொழுது, அதன் உண்மைத் தன்மையான தங்கம் போன்ற அதன் சுயம் பிரகாசம் வெளிப்படுகின்றதோ, மேலும், அதை வெளிக் கொண்டு வருவதற்கு ஒரு வேதியியல் வல்லுநரான **'வேதி'** (வேதியியல் இராசயண வல்லுஞர்) தேவைப்படுகின்றாரோ, அவ்வாறே, இந்த சீவர்கள் தங்கள் மீது ஏற்றி வைத்துக் கொண்ட பலவிதமான (நாநாவிதமான) மலங்களான களிம்பினை, தன் ஞானத்தினால் வேதிவினைக்கு உட்படுத்தி, அவர்களது உண்மை சொரூபத்தை வெளிச்சத்திற்கு கொண்டு வர, **'சத்குரு'** என்ற ஒரு **'வேதி'** வேண்டியதாக இருக்கின்றது.

அவர், இந்த சீவர்கள் அறியாமையினால் ஏற்றி வைத்துக் கொண்ட பலவாறான சீவ தத்துவங்களை நீக்கும் பொருட்டு, அவர்களது அறியாமையை சுட்டிக் காட்டி, அவர்களது மனதில் ஏற்றி வைத்துக் கொண்ட மலங்களை, தன்னுடைய **'ஞானம்'** என்ற இரசாயணத்தினால், வேதியல் விளைவுக்கு உட்படுத்தி, சீவர்களது உண்மை சொருபத்தை வெளிப்படுத்தி, அவர்களை தங்களது உண்மைச் சொரூபத்தில் பிரகாசிக்கச் செய்கின்றார்.

அந்த வகையிலே, இந்த **"நாநா சீவ வாதக் கட்டளை"** என்ற நூலுக்கு பொருள், சீவர்களின் பலவாறான மலங்களை போக்கும் வேதியல் விளைவுக்கு உட்படுத்தும் வாதியாக இந்த **'சத்குரு'** இருந்து, தனது உபதேசத்தால் இந்த சீவர்கள் தங்கள்

மீது ஏற்றி வைத்துக் கொண்ட மலங்களை (மன அழுக்குகளை) நீக்கும் கட்டளை (உபதேசம்) என்பதாக இந்த நூல் தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது.

எவ்வாறு ஒரு வேதியானவன் செம்பு மீது உள்ள களிம்பை வேதித்து, அதன் உண்மை சொரூபமான தங்கம் போன்ற பிரகாசத்தை வெளிக் கொண்டு வருகின்றானோ, அதுப் போன்று, இந்த சீவர்கள் மீது ஏற்றி வைத்துள்ள அனேக களிம்புகளான, கர்த்தா, போக்தா, ஞாதா என்ற பல்வாறான சீவ தத்துவங்களை தன் மீது ஏற்றி வைத்துக் கொண்டுள்ளதை சுட்டிக் காட்டி, அந்த பலவாறான சீவ தத்துவங்களிலிருந்து, அந்த சீவனை விடுவித்து, ஏக தத்துவமான **“அதுவாகவே நீ இருக்கின்றாய்”** என்ற ஆன்ம தத்துவத்தை உபதேசித்து, சீவனின் உண்மை சொரூபத்தை, சுயம் பிரகாசத்தை வெளிக் கொண்டு வருகின்றார்.

அந்த வகையிலே, இந்த **“நாநா சீவ வாதக் கட்டளை”** என்ற நூல், பலவாறான அறியாமைகளை ஏற்றி வைத்துக் கொண்டுள்ள சீவர்களை தன்னுடைய உபதேசக் கட்டளையினால், அவர்களுக்குள் இரசவாதத்தை ஏற்படுத்தி, வேதித்து, தன் உண்மை சொரூபத்தை வெளிக் கொண்டு வருகின்ற சாதனமாக அமைந்துள்ளது.

எந்த ஒரு ஜடப்பொருளான உலோகமாக இருக்கட்டும், உயிர் பொருளாக இருக்கட்டும், அவைகள், தன்னைப் பற்றிய உண்மைத் தன்மையை தானாகவே என்றுமே அறிந்துக் கொள்ள முடியாது.

அறியாமையிலே இருக்கின்ற அந்த சீவனை, அது செய்த புண்ணியங்களின் அடிப்படையில், முழுக்க முழுக்க ஈஸ்வர அனுக்கிரகம் உண்டாகி, அதன் வாயிலாக, தக்க சத்குருவின் சந்நிதியில் கொண்டு சேர்த்து, அவர் வாயிலாகவே தன் உண்மை சொருபத்தை அறிந்துக் கொள்ள வைக்கும்.

பொதுவாக, எல்லா ஜடப் பொருட்களும், உயிர் பொருட்களும் தங்கள் உண்மை இயல்பினை, தாங்களாகவே இந்த உலகத்திற்கு வெளிப்படுத்திக் கொள்ளாது.

எதற்கு, அதன் முன்வினைப் பலன்களால் ஈஸ்வர அனுக்கிரகம் உண்டாகின்றதோ, அப்பொழுது மட்டுமே உலோகம் போன்ற ஜடப் பொருளாக இருந்தாலும், மனிதன் போன்ற உயிர் பொருளாக இருந்தாலும், ஈஸ்வரனின் விருப்பத்தின், ஆணைப்படியே இந்த உலகத்தின் வெளிப்பாட்டிற்கு கொண்டு வரப்பட்டு, மற்றவர்களுக்கு பயன் படுகின்றது.

அந்த வகையிலே, ஒரு உலோகம் தன் களிம்புகள் (அழுக்குகள்) நீங்கி, தன் உண்மை சொரூபத்தில் பிரகாசிக்க ஒரு வாதி எப்படி அவசியமோ, அப்படியே ஒரு சீவன் தன் களிம்புகள் (அழுக்குகள்) நீங்கி தன் உண்மை சொருபத்தில் பிரகாசிக்க ஒரு ***'சத்குரு'*** மிகவும் அவசியம்.

ஒரு இரசவாதி செம்பு போன்ற உலோகத்திற்கு கிடைத்து, அதனைப் பிரகாசிக்கச் செய்வது என்பதுவும், ஒரு சத்குரு சீவனுக்கு கிடைத்து அவனை பிரகாசிக்கச் செய்வது என்பதுவும், தானாகவே நடைப்பெற்று விடாது.

அதற்கு பல கோடி சென்மங்களாக அந்த சீவன் செய்த புண்ணியத்தின் அடிப்படையிலே மட்டுமே, அதற்கு ஈஸ்வர அனுக்கிரகம் உண்டாகி, தக்க ஆசானாக ஜடப்பொருளுக்கு ஒரு இரசவாதியோ, உயிர் பொருளான சீவர்களுக்கு ஒரு சத்குருவோ கிடைக்க முடியும்.

அனைத்து செம்பு உலோகங்களும் மறைப்பிலிருந்து வெளிப்பட்டு, தன் உண்மை சொரூபத்தில் பிரகாசித்து இந்த உலகத்திற்கு பயன்பட்டு விடாது.

அதுப்போன்ற, எல்லா சீவர்களும் மறைப்பிலிருந்து வெளிப்பட்டு, தன் உண்மை சொரூபத்தில் பிரகாசித்து, இந்த உலகத்திற்கு ஜீவன் முக்தனாக பயன்பட்டு விட முடியாது.

அவ்வாறு உலகத்திற்கு பயன்பட வேண்டுமானாலும், அதனை இரசவாதத்திற்கு உட்படுத்துபவன் சாக்ஷாத் அந்த சர்வேஸ்வரனைத் தவிர வேறு ஒருவராலும் ஆகாது.

அதனால்தான் இதை அறிந்துக் கொண்ட அன்றைய மகான்கள் **“அவன் அருளாலே அவன் தாள் பணிந்து”** என்று பாடிவிட்டுச் சென்றிருக்கின்றார்கள்.

ஆகவே, இந்த நூலைப் படிக்கின்ற அதிகாரி யாராக இருக்க வேண்டும், இந்த நூலிலே கூறப்பட்டுள்ள விசயம் யாருக்குப் போய்ச் சேர வேண்டும், இந்த நூலைப் படிக்கின்றவர்களுக்கும், இந்த நூலுக்கும் எப்படிப்பட்ட சம்பந்தம் உண்டாக வேண்டும், இந்த நூலைப் படிப்பதினால் உண்டாகும் பிரயோஜனம் என்னவாக இருக்க வேண்டும் என்ற

அனைத்தையுமே அந்த ஒரே ஒருவன்தான் தன்னில் தானாக இருந்து இவைகளைத் தீர்மானிக்கின்றான்.

அந்த வகையிலே, இந்த நூலைப் படிக்க ஆர்வத்துடன் வந்திருக்கின்ற அதிகாரிகளான முமுக்ஷுவுக்கு, இந்த நூலை முழுமையாக படித்து முடிக்க, எந்தவிதமான விக்னங்களும் உண்டாகாமல், விக்னங்களை நீக்கி அருளுகின்ற விநாயகப் பெருமானின் ஆசிப்பெற்று, இந்த நூல் வாசிக்கப்படுகின்றது.

**நன்றி!**

**என்றும் அன்புடன்,**

**சுவாமி பிரபஞ்சநாதன்.**



# நாநா சீவ வாதக் கட்டளை

**(தவத்திரு சேஷாத்திரி சிவனார் அருளியது)**

**ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்**
**ஞானகுரு வாணியை உள்நாடு.**

பரப்பிரம்மம் என்பது, ஒன்று மட்டுமே இருக்கின்றது. அது செய்கின்றேன், அனுபவிக்கின்றேன் என்பதான கர்த்தா, போக்தா போன்ற அபிமானம் ஏதுமின்றி, செயல்கள் ஏதுமற்று, எல்லாவற்றையும் வேடிக்கை மட்டும் பார்க்கின்ற சாட்சியாக இருக்கின்ற, அந்த சர்வ சாட்சியினிடத்திலே, எவ்வாறு நெருப்பிலே இயல்பாகவே வெப்பம் இணைந்து, அதிலிருந்து பிரிக்க முடியாதவாறு இருக்கின்றதோ, அதைப் போன்று, அந்த பிரம்மத்திலே இருந்து பிரிக்க முடியாத ஒரு சக்தி இருக்கின்றது. அந்த சக்தி பிரம்மத்தில் முழுவதுமாக அடங்கி இருக்கின்ற பொழுது, அந்த பிரம்மத்தை **"சுத்தப்பிரம்மம்"** என்ற பெயரில் அழைக்கப்படுகின்றது.

அத்தகைய அந்த சுத்தப் பிரம்மத்திலிருந்து, பிரிக்க முடியாத அந்த சக்தி வெளிப்பட்டு, அந்த பிரம்மத்தையே முழுவதுமாக வியாபிக்கும் பொழுது, அந்த சுத்தப்பிரம்மம் தன்னில் தானாய் தன்னைப் பரவி இருக்கின்ற சக்தியின்

வியாபகத்துக்குள் இருப்பதினாலே அதனை **“பரப்பிரம்மம்”** என்று அழைக்கப்படுகின்றது.

எந்த ஒரு இலக்ஷணமும் இன்றி, அதாவது, அது இப்படிப்பட்டது என்ற எந்தவிதமான வரையறைக்கும் உட்படுத்த முடியாத, ஒன்றுமில்லாத அந்த சக்திக்கு, பிரம்மத்தினுடைய இருப்பின் காரணமாக அதன் சந்நி தானத்தில், ஒரு ஆணும், பெண்ணும் இணைகின்ற பொழுது உண்டாகின்ற ஒரு ஆனந்த அனுபவத்தை வெளிப்படுத்த முடியாதது போன்று, இந்த சக்தியிடம் இருந்து வெவ்வேறு விதமான சத்துவகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்ற மூன்று குணங்கள் உண்டாயின.

அந்த சக்தியின் இந்த மூன்று குணங்களிலே, சுத்த சத்துவகுணத்திற்கு **“ஆனந்தரூப சக்தி”** என்ற பெயரும், சுத்த ரஜோகுணத்திற்கு **“சித்ரூப சக்தி”** என்ற பெயரும், சுத்த தமோகுணத்திற்கு **“சத்ரூப சக்தி”** என்ற பெயரும் உண்டானது.

இவ்வாறு உண்டான அந்த சக்தியின் மூன்று குணங்களிலே சுத்த சத்துவ குணத்தின் வெளிப்பாடான ஆனந்தரூப சக்தியுடன் அந்த பரப்பிரம்மம் கூடிச் **சர்வானந்தம்** என்ற ஆழ்ந்த உறக்கத்தை (சுழுத்தி அவஸ்தையை) அடைகின்ற பொழுது, **‘பரப்பிரம்மம்’** என்ற பெயர் போய், **“பரமானந்தர்”** என்ற பெயர் வந்தது.

இந்த பரமானந்தர் சுத்த ரஜோ குணத்தின் வெளிப்பாடான சித்ரூப சக்தியுடன் கூடிச் சர்வ பிரகாசம் என்ற கனவு நிலையை (சொப்பன அவஸ்தையை) அடைகின்ற

பொழுது, **பரமானந்தர்** என்ற பெயர் போய், **"தேசோமயர்"** என்ற பெயர் வந்தது.

இந்த தேசோமயர் சுத்த தமோ குணத்தின் வெளிப்பாடான சத்ரூப சக்தியுடன் கூடி, சர்வ வியாபகம் என்ற விழிப்பு நிலையை (சாக்கிர அவஸ்தையை) அடைகின்ற பொழுது, **தேசோமயர்** என்ற பெயர் போய், **"பரிபூரணர்"** என்ற பெயர் வந்தது.

இந்த அகண்ட பரிப்பூரண சச்சிதானந்த பிரம்மத்தி னிடத்திலே, சிப்பியிலே காணப்படுகின்ற வெள்ளி எவ்வாறு அதற்கு வேறானதாக இல்லையோ, அவ்வாறே **'மூலப்பிரக்ருதி'** என்னும் ஒரு சக்தி உண்டு. அந்த சக்தியிலிருந்து முக்குணங்களும் வெளிப்படாது சூக்குமமாய், அவ்யக்தமாய் நிற்கும் நிலையே **'மூலப்பிரகிருதி'** எனப்படுகின்றது.

இவ்வாறு, முக்குணங்களும் வெளிப்படாது பிரம்மத்தில் ஒடுங்கி இருக்கின்ற மூலப்பிரகிருதியை **'அவ்யக்தம்'** (ஒடுங்கியுள்ளது) என்றும் அழைக்கப்படுகின்றது.

அதாவது, பரப்பிரம்மத்திடம் இருந்து உண்டான மூலப்பிரக்ருதியான இந்த பிரபஞ்ச சிருஷ்டி முதலில் மூன்று குணங்களாக வெளிப்பட்டது.

பரப்பிரம்மம் தன்னை சுத்த சைதன்யமான வெளிப்படுத்திக் கொண்ட அறிவுக்கு முன்பு இருந்த மறதியே அவ்வியக்தப் பிரக்ருதி (மூலப்பிரக்ருதி) எனப்படும். அதுவே உலகத்தில் காரிய - காரண வடிவங்களை ஏற்று நடத்துகிறது.

இந்த மூலப் பிரக்ருதியிடமிருந்து **சத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம்** என்ற மூன்று குணங்கள் வெளிப்பட்டன.

இந்த மூன்று குணங்களிலே ஆகாயம் போன்று எங்கும் நிறைந்துள்ள பரப்பிரம்மத்தின் பிரதி பிம்பம் தூய்மையான நீரிலே பிரதி பிம்பிக்கின்ற தெளிவான பிம்பம் போல, முதற் குணமான **சத்துவ குணத்தில்** பிரதி பிம்பிக்கின்றது.

இவ்வாறு, பிரம்மத்தின் சாயையில் தோன்றியது **"மாயை"** எனப்படுகின்றது. இந்த மாயையை **'சர்வக்ஞ உபாதி'** என்றும் **'ஈஸ்வர காரண சரீரம்'** என்றும் அழைக்கப்படுகின்றது.

அத்தகைய தூய்மையான சத்துவ குணத்தில் பிரதி பிம்பிக்கின்ற மாயையில் தோன்றியதே **'ஈஸ்வரன்'** என்றும், **'அந்தர்யாமி'** என்றும் அழைக்கப்படுகின்றது.

(பல வகையான மணிகளைக் கோர்த்து மாலையாக கட்டுவதற்கு, சரடு என்ற நூல் எப்படி ஆதாரமாக உள்ளதோ, அதுப் போன்று, எல்லா உடல்களிலும் ஊடுருவி, அவைகளுக்கு ஆதாரமாகத் தொடர்ந்து விளங்கும் ஆன்மாதான் **'அந்தர்யாமி'** எனப்படுகின்றது.)

மற்ற குணங்களான ரஜோகுணம், தமோகுணம் இந்த ஈஸ்வரனைப் பற்றாததால் நிமித்த காரணமான ஈஸ்வரனுக்கு அகங்கார, மமகார (நான், எனது என்ற) ரூப அபிமானம் கிடையாது.

இந்த சத்துவகுண மாயையினிடத்திலே, சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தில் ரஜஸ், சத்துவத்தில் தமஸ் என்ற மூன்று குணங்கள் உண்டு.

இதில், சத்துவத்தில் சத்துவம் பிரதானமாக இருக்கும் பொழுது, அதில் பிரதிபிம்பித்த ஈஸ்வரன் இந்த உலகத்தை காக்கின்ற **'விஷ்ணு'** என்றும், சத்துவத்தில் ரஜஸ் பிரதானமாக இருக்கும் பொழுது, அதில் பிரதிபிம்பித்த ஈஸ்வரன் இந்த உலகத்தை படைத்த **'பிரம்மா'** என்றும், சத்துவத்தில் தமஸ் பிரதானமாக இருக்கும் பொழுது, அதில் பிரதிபிம்பித்த ஈஸ்வரன் இந்த உலகத்தை ஒடுக்கின்ற **'உருத்திரன்'** என்றும் கூறப்படுகின்றது. இவ்வாறு, இந்த மூலப் பிரக்ருதியின் சத்துவகுண கற்பனை கூறப்பட்டது.

இனி மூலப்பிரக்ருதியின் ரஜோகுணம் அனேக ரூபங்களாகப் பிரிந்து, **'அவித்தைகள்'** (அறியாமைகள்) என்றும், **'சீவகாரண சரீரங்கள்'** என்றும் ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்வுகளுடன் காணப்படும்.

இந்த அவித்தைகளிடத்திலே (அறியாமைகள்) பரப்பிரம்மத்தின் பிரதி பிம்பம் சற்று கலங்களான நீரிலே பிரதி பிம்பிக்கின்ற பிம்பம் போல, இரண்டாம் குணமான **ரஜோ குணத்தில்** பிரதி பிம்பிக்கின்றது.

அவ்வாறு, அனைத்திலும் பிரதிபிம்பித்த சித்தின் நிழல்களே கோடிக்கணக்கான **"சீவர்கள்"** எனலாம்.

இந்த சீவர்களுக்கு சூக்ஷும, ஸ்தூல சரீரங்கள் உண்டகுவதற்கு முன்பாக இருக்கின்ற காரண சரீரத்தின் பெயரே **“பிராக்ஞன்”** என்று கூறப்படும்.

இந்த அவித்தையினிடத்திலே ரஜஸில் சத்துவம், ரஜஸில் ரஜஸ், ரஜஸில் தமஸ் என்ற மூன்று குணங்களும் உண்டு.

இதிலே ரஜஸில் சத்துவகுணம் பிரதானமாகும் பொழுது, அதில் பிரதிபிம்பித்த சிதாபாஸன் தத்துவ ஞான நிஷ்டன் என்ற **‘ஞானி’** ஆவான்.

ரஜஸில் ரஜோகுணம் பிரதானமாகும் பொழுது, அதில் பிரதிபிம்பித்த சிதாபாஸன் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்ற குணங்களை உடைய கர்ம நிஷ்டன் என்ற **‘அஞ்ஞானி’** ஆவான்.

ரஜஸில் தமோகுணம் பிரதானமாகும் பொழுது, அதில் பிரதிபிம்பித்த சிதாபாஸன் சோம்பல், தூக்கம், மயக்கம் என்ற குணங்களை உடைய ஐந்தறிவு கொண்ட **‘மிருகம்’** போன்று இருப்பான். இவ்வாறு, இந்த மூலப் பிரக்ருதியின் ரஜோகுண கற்பனை கூறப்பட்டது.

ஆன்மாவினுடைய **“சித்”** என்ற அறிவு ஸ்வரூபம், ஜடமான சூக்ஷும சரீரமான மனதினிடத்தில் வியாபிக்கும் போது, அதை **“சிதாபாஸன்”** என்று அழைக்கப்படுகின்றது.

மேற்கூறிய மாயா சக்தியாகிய ஈஸ்வரன் அருளினாலே, பொலிவு மிகுந்த உயிர்களுக்கு எல்லாம் சூக்ஷும தேகம் உண்டாகத் தேவையான மூலப் பிரக்ருதியின் மூன்றாவது குணமான தமோகுணம் இரண்டு சக்திகளாகப் பிரிந்து, அதில் ஒன்று **'ஆவரணம்'** (மறைப்பு) என்றும், மற்றொன்று **'விக்ஷேபம்'** (பலவாகத் தோன்றுவது) என்றும் ஆகின.

'**ஆவரணம்**' என்பது *மறைக்கும் சக்தி* எனவும், '**விக்ஷேபம்**' என்பது *தோன்றும் சக்தி* எனவும் அறியவும்.

அதாவது, பரப்பிரம்மத்தின் பிரதி பிம்பம் தமோ குணத்தில் அறிவு விளங்காத (பிரகாசிக்காத) ஆவரண சக்தியாகவும், அறிவு விளங்குகின்ற விக்ஷேப சக்தியாகவும் தோன்றியது.

இதில் ஆவரண சக்தியானது **தத்துவ ஞானிகளையும், ஈஸ்வரனையும்** தவிர, மற்ற அனைத்து சீவர்களுக்கும் அறியாமையின் காரணமாக, மூன்று தேகங்கள், சிதாபாஸன், சாஷி, சைதன்யம் போன்ற இவைகளை அறிய முடியாமல் மறைக்கும்.

மூன்று தேகங்கள் என்பது **ஸ்தூலம், சூக்ஷுமம், காரணம்** என்ற மூன்று உடல்கள் ஒவ்வொரு சீவனுக்கும் உள்ளது.

இங்கு சாட்சி என்பது, ஒரு சம்பவத்தில் எந்தவித செயல்களையும் செய்யாமலும், அனுபவிக்காமலும், அந்த செயல்களினால் எந்தவித பாதிப்புக்களையும் அடையாமலும்,

சம்பவத்தை வேடிக்கை மட்டும் பார்த்துக் கொண்டிருப்பது **“சாக்ஷி”** என்று அழைக்கப்படுகின்றது.

ஆன்மாவோடு ஒன்றி, அந்த ஆன்மாவாகவே தன்னில் தானாய் சுயம் பிரகாச அனுபூதியில், பூரண ஞானத்தில் திளைத்திருப்பதை **“சைதன்யம்”** எனப்படுகின்றது.

இவைகளை அறிய முடியாத மறைப்பின் காரணமாக, இந்த அறியாமையில் உள்ள சீவர்கள் இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒன்றாக தன்மீது ஏற்றிவைத்துக் கொண்டு **“நான்”** என்று நினைத்து அபிமானிப்பர்.

இந்த அபிமானத்தை, **‘அஹங்காரம்’** என்றும், **‘சம்ஸாரம்’** என்றும் கூறப்படுகின்றது.

சத்குருவின் கருணையினாலே, இந்த ஆவரணம் என்ற மறைப்பு நீங்கி, இருபத்தொன்பது தத்துவங்களின் பேதங்களை அறிந்து, அறிவு பிரகாசிப்பதே **‘முக்தி’** எனப்படுகின்றது. இவ்வாறு, ஆவரண சக்தியின் காரியம் கூறப்பட்டது.

இனி விக்ஷேப சக்தியினிடம் இருந்து சப்த அம்சமான **ஆகாசம்** தோன்றியது. பிறகு இந்த ஆகாசத்திலிருந்து பரிச அம்சமான காற்றும், காற்றில் இருந்து ரூப அம்சமான அக்னியும், அக்னியிலிருந்து இரச அம்சமான நீரும், நீரிலிருந்து வாசனை அம்சமான மண் தோன்றியது.

இந்த சூக்ஷும பஞ்ச பூதங்களுக்கு காரணமான விக்ஷேப சக்தியினிடத்திலே, தமஸில் சத்துவம், தமஸில் ரஜஸ், தமஸில் தமஸ் என்ற இந்த மூன்றும் அற்ப கருவாக

இருந்ததினாலே, அதன் காரணமாகிய இந்த தன்மாத்திரை களான பஞ்சபூதங்களும் மூன்று குணங்களுடனேயே பிறந்தன.

இவ்வாறு, தன்மாத்திரைகளாக போற்றப்பட்ட இந்த ஐந்தும், **"சூக்ஷும பஞ்சபூதங்கள்"** என்றும், **'அபஞ்சீகிருத பூதங்கள்'** என்றும் அழைக்கப்படுகின்றன.

இந்த அபஞ்சீகிருத சூக்ஷும பஞ்ச பூதங்களின், தன் மாத்திரைகளில் இருந்து சகல ஜீவர்களுக்கும் சூக்ஷும சரீரங்கள் (கண்ணிற்குத் தெரியாத உடல்கள்) உண்டாயின.

முன்பு உண்டான சத்துவகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்ற மூன்று குணங்களில் பஞ்ச பூதங்கள் அடங்கலும் தொடர்ந்து நிற்கும். இந்தச் சூக்ஷ்ம பஞ்ச பூதங்களின் சத்துவ அம்சத்திலே, பூதத்துக்கு ஒவ்வொரு மாத்திரையாக எடுத்து தனித்தனியே வைத்தது முறையே, காது, மூக்கு, கண்கள், நாக்கு, தோல் என ஐந்து **"ஞானேந்திரியங்கள்"** என்ற கருவிகள் ஆயின.

அடுத்து, அந்த பஞ்ச பூதங்களின் சத்துவ அம்சத்திலே பூதத்துக்கு ஒவ்வொரு மாத்திரையாக எடுத்து, அனைத்தையும் ஒன்றாகச் சேர்த்து **மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்** மற்றும் **உள்ளம்** என்ற **"அந்தக் கரணங்கள்"** ஆயிற்று.

இந்த அந்தக்கரணத்தில், ஆகாசத்தின் அம்சம் கூடினதற்கு அடையாளமாக, இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப் போல அனைத்திற்கும் இடம் கொடுக்கின்றது. இதை தரிசிக்கின்ற விருத்திக்கு **'உள்ளம்'** என்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் வாயுவின் அம்சம் கூடினதற்கு அடையாளமாக, இந்த அந்தக்கரணமும் வாயுவைப் போன்று அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு **'மனம்'** என்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் அக்னியின் அம்சம் கூடினதற்கு அடையாளமாக, இந்த அந்தக்கரணமும் அக்கினியைப் போன்று, இது, இது இன்னது என்று விளக்குகின்றது. இதைத்தான் **'புத்தி'** எனப்படுகின்றது.

இந்த அந்தக்கரணத்தில் நீரின் அம்சம் கூடினதற்கு அடையாளமாக, இந்த அந்தக்கரணமும் நீரினைப் போன்று, பல்வேறு விசய சுகங்களில் பற்றி இழுக்கின்றது. அதாவது, பல்வேறு எண்ணங்களை பலவாறான விருத்திகளாக இழுத்துக் கொள்வதை **'சித்தம்'** எனப்படுகின்றது.

இந்த அந்தக்கரணத்தில் பிருத்வியின் (மண்) அம்சம் கூடினதற்கு அடையாளமாக, இந்த அந்தக்கரணமும் மண்ணைப் போன்று, கடினமாக மாறி **'நான்'** என்று அபிமான விருத்திக்கு உட்பட்டு, **'அஹங்காரம்'** என்று அழைக்கப் படுகின்றது.

இன்னும், ஆகாசம் முதலான பஞ்ச பூதங்களினுடைய சத்துவ அம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைத்து, சுரோத்திராதி (காதுகள்) ஞானேந்திரியம் என்று கூறப்படும்.

இவைகளில் சுரோத்திரம் (காதுகள்) ஆகாசத்தின் அம்சம் ஆனபடியால், ஆகாசத்தின் குணமான சப்தம் என்ற குணத்தின் அடிப்படையில் சப்தத்தை மட்டும் கேட்டு அறியும்.

துவக்கு (தோல்) வாயுவுன் அம்சம் ஆனபடியால், வாயுவின் குணமான ஸ்பரிசம் என்ற தொடு உணர்வை மாத்திரம் அறியும்.

சக்ஷு (கண்கள்) அக்னியின் அம்சம் ஆனபடியால், அக்னியின் குணமான அனைத்தையும் விளங்குமாறு ரூபமாக காணும்.

சிங்நுவை (நாக்கு) நீரின் அம்சம் ஆனபடியால், நீரின் குணமான ரசத்தை சுவைத்து அறியும்.

கிராணம் (மூக்கு) பிருத்வியான மண்ணின் அம்சம் ஆனபடியால், மண்ணின் குணமான மணத்தை அறிய உதவும்.

இந்த ஐந்தும் ஒன்றோடொன்று கூடாதபடியால், ஒன்று மற்றொன்றின் குணத்தைக் கிரகிக்க முடியாது. அந்தக் கரணத்தில் ஐந்து மாத்திரைகளும் ஒன்றாய்க் கூடினது கொண்டு, இந்த ஐந்து இந்திரியங்களின் வாயிலாக, ஐந்து விதமான விசயங்களை அறியும்.

இந்த சத்துவகுணத்தில் உண்டான மனம், புத்தி, சித்தம் அஹங்காரம் மற்றும் உள்ளம் என்ற அந்தக்கரணம் ஐந்தும், கண்கள், காதுகள், நாக்கு, மூக்கு, தோல் என்ற ஞானேந்திரியங்கள் ஐந்தும் என மொத்தம் இந்த பத்தும் சேர்ந்து சத்துவ அம்சம் ஆனபடியால், **ஞான சாதனம்** ஆயின.

அடுத்ததாக, பஞ்ச பூதங்களின் ராஜஸ அம்சத்திலே பூதத்திற்கு தலா ஒவ்வொரு மாத்திரை எடுத்து, ஒன்றாகச் சேர்த்து பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என **“ஐந்து வாயுக்கள்”** ஆயின.

இதிலே, வியானவாயு ஆகாசத்தின் அம்சம் ஆனபடியால், ஆகாசத்தைப் போன்று, எங்கும் வியாபித்து இருக்கும்.

பிராணவாயு வாயுவின் அம்சம் ஆனபடியால், ஏனைய வாயுக்களுக்கு எல்லாம் தலைமையாக இருந்து, நாசிகளில் தொடங்கி அனைத்து உறுப்புகளுக்கும் உயிரூட்டும் வகையில் ரத்த ஓட்டத்தின் மூலம் பிராண வாயுவினை இருதயத்திற்கு அளித்து வரும்.

அபானவாயு அக்னியின் அம்சம் ஆனபடியால், அக்னியை போன்று போட்டதை அனைத்தையும் எரிக்கும் சக்தியாக இதுவும், வயிற்றுக்குள் விழுந்த உணவைச் செறிக்கச் செய்து, குதம் என்ற ஆசன வாய் பகுதியில், அபான வாயு கீழ் நோக்கிய மலம், சிறுநீர் போன்றவைகளை வெளிப்படுத்த உதவுகின்றது.

சமானவாயு நீரின் அம்சம் ஆனபடியால், இதனை சரீர நடுவாகிய நாபி ஸ்தானத்தில் நின்று உண்ட உணவுகளை நீரைப் போன்று இழுத்து, ரஸமாக்கி உடல் முழுவதும் பரவி உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரை இரத்த ஓட்டத்தை சீராக்கும்.

உதானவாயு மண்ணின் அம்சம் ஆனபடியால், கழுத்துப் பகுதியில் கண்டத்தில் இருந்து, உண்ட உணவுகளை கடைந்து, மூச்சு மண்டலத்தின் மேல் பகுதியில் உள்ள முன் தொண்டை, மூக்கு, குரல் வளை, மூச்சுக்குழல், மூச்சின் இதர கிளை குழல்கள் ஆகிய கருவிகளின் உதவியினாலும் நாபி எனும் பகுதியில் இருந்து பிராண உந்துதலால் குரல் (சப்தம்) எழும்புவதற்கு காரணமாக உள்ளது.

இதைத்தவிர, மேலும், ஐந்து வாயுக்களாக வாந்தியை உண்டு பண்ணுவது நாகன் என்றும், இமைகளை இமைக்கச் செய்வது கூர்மன் என்றும், தும்மலை உண்டாக்குவது, கிரிகரன் என்றும், கொட்டாவி விடச் செய்வது தேவதத்தன் என்றும், மரணத்திற்கு பிறகு உடலை வீங்கி வெடிக்கச் செய்வது தனஞ்செயன் என்றும் கூறப்படுகின்றது. ஆக, இந்த அனைத்து வாயுக்களுமே அடிப்படையில் தலைமையான வாயுவாகிய பிராணன் என்ற வாயுவுக்கு வேறானதல்ல எனப்படுகின்றது.

பஞ்சபூதங்களின் ரஜோகுண அம்சத்திலே பூதத்துக்கு ஒவ்வொரு மாத்திரையாக எடுத்துத் தனித்தனியே வைத்தது, முறையே வாய் (பேசும் சக்தி), கை (கொடுக்கல், வாங்கல் சக்தி), கால் (நடக்கும் சக்தி), எருவாய் (மலம் கழிக்கும் சக்தி), கருவாய் (இன்பம் கொடுக்கும் சக்தி) என ஐந்து செயல்களைச் செய்யக்கூடிய **"கர்மேந்திரியங்கள்"** ஆயின.

இதிலே, ஆகாச அம்சமான வாக்கு பேசும் சக்தியாகவும், வாயுவின் அம்சமான கைகள் கொடுக்கல், வாங்கல் செய்வதாகவும், அக்னியின் அம்சமான பாதம் நடக்கும் சக்தியாகவும், நீரின் அம்சமான எருவாய் (பாயுரு)

மலம், சிறுநீர் போன்றவைகளை வெளியே தள்ளுவதற்கும், மண்ணின் அம்சமான கருவாய் (உபஸ்தம்) சுகத்தைக் கொடுப்பதாகவும் இருக்கின்றன.

இந்த ஐந்தும் தனித்தனியாக இருந்துக் கொண்டு வேறு காரியங்களை செய்ய இயலாது.

இந்த வாயுக்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும் ஆக இந்த பத்தும் ரஜோகுண அம்சமாக ஆனபடியால், கிரியா சாதனமாக, காரியங்களைச் செய்ய உதவுகின்றன.

அதாவது, ரஜோகுணத்தில் சமஸ்டி பாகத்தில் (அனைத்தும் ஒன்றாக) உண்டானவைகள் பிராணன்கள் என்றும், ரஜோ குணத்தில் வியஸ்டி பாகத்தில் (தனித்தனியாக) உண்டானவைகள் கர்மேந்தியங்கள் என்றும் ஆயின.

ஆக, இந்த அந்தக்கரணம் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாயுக்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும் என இருபது தத்துவமும்**, ‘சூக்ஷும சரீரம்’** எனப்படுகின்றது. இந்த சூக்ஷும சரீரமே அனைத்து ஜீவராசிகளுக்கும் **“லிங்க சரீரம்”** எனப்படுகின்றது.

இந்த சூக்ஷும சரீரத்தை மாயாப் பிரதிபிம்பனாக இருக்கின்ற ஈஸ்வரன் அறியாமையினால் ரஜோகுணத்தில் வெளிப்பட்ட பல்வேறு சீவர்களை ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சரீரமாக சிருஷ்டி செய்து அளித்தான் என்ற இந்த சூக்ஷும சரீர கற்பனை கூறப்பட்டது.

இனி, ஸ்தூல பூத உற்பத்தி கூறப்படுகின்றது. அது எவ்வாறெனில், சத்துவகுணம், ரஜோகுணம் அம்சங்கள் போக மீதமுள்ள தமோகுண அம்சமாய் இருக்கின்ற, ஐந்து பூதங்களையும், ஒவ்வொன்றையும் இரண்டு, இரண்டாக பகுத்து, முதற்பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை நான்கு நான்காகப் பகுத்து, இரண்டாம் பாதி ஐந்தில், தன் அம்சத்துடனே சேர்க்காமல், மற்ற நான்கு பூதங்களுடன் அரைக்கால், அரைக்கால் மாத்திரையாகக் கொடுத்து உடல்களை உண்டாக்குவதற்காக, இந்த பஞ்ச பூதங்களை இவ்வாறு சேர்ப்பது **‘பஞ்சீகரணம்’** எனப்படுகின்றது.

அதாவது, ஒவ்வொரு பூதத்திலும் மற்ற நான்கு பூதங்கள் சேர்ந்து ஒவ்வொன்றும் ஐந்தைந்தாயிற்று என்பதாம்.

இப்படிப் பஞ்சீகரித்ததினால் கண்களுக்குத் தெரிகின்ற ஸ்தூல ஆகாசமும், ஸ்தூல வாயுவும், ஸ்தூல அக்னியும், ஸ்தூல நீரும், ஸ்தூலப் பூமியும் உண்டாயின.

இப்படிப்பட்ட இந்த ஸ்தூல மகா பஞ்ச பூதங்களின் வாயிலாகவே அனைத்து ஜீவர்களின் ஸ்தூல சரீரங்களும், அண்ட சராசங்களும், பல புவனங்களும், அவற்றுள் ஒன்றாகிய இந்த பூமியும், இந்த பூமியில் போகங்களும் உண்டாயின.

(**புவனங்கள்:-** பூ, புவ, சுவ, சன, தபோ, மகா, சத்திய ஆகிய ஏழு மேல் உலகங்கள் மற்றும், அதல, விதல, சுதல, தராதல, இரசாதல, மகாதல, பாதால ஆகிய ஏழு கீழ் உலகங்கள் என்பனவாகும்.)

இவ்வாறு பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஸ்தூல பூதங்களிலே ஆகாசத்திலே ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம், ஆகிய நான்கு குணங்களும் வியாபித்து இருந்தாலும், அவைகளை தோற்றத்திற்கு கொண்டுவராமல், சப்தம் என்ற ஒரு குணத்தை மட்டும் வெளிப்படுத்துவதாக இந்த ஆகாச பூதம் காணப்படுகின்றது.

அதுப்போன்றே, வாயுவிலே ரூபம், ரஸம், கந்தம் ஆகிய மூன்று குணங்களும் வியாபித்து இருந்தாலும், அவைகளைக் காட்டிலும், இதன் உண்மையான பிரதான குணங்களான சப்தமும், ஸ்பரிசமும் மட்டுமே வாயுவின் குணங்களாக வெளிப்படுகின்றது.

அதுப்போன்றே, அக்னியிலே ரஸம், கந்தம் ஆகிய இரண்டு குணங்களும் வியாபித்து இருந்தாலும், அவைகளைக் காட்டிலும் பிரதான குணங்களான சப்தமும், ஸ்பரிசமும், சேர்ந்து, இத்துடன் இதன் உண்மைக் குணமான ரூபமும் வெளிப்படுகின்றது.

அதுப்போன்றே, நீரிலே, கந்தம் ஆகிய ஒரு குணம் மட்டும் வியாபித்து இருந்தாலும், அவைகளைக் காட்டிலும் மற்ற குணங்களான சப்தம், ஸ்பரிசம், ரூபம் இத்துடன் இதன் உண்மைக் குணமான ரஸம் போன்ற குணங்களும் காணப் படுகின்றன.

அதுப்போன்றே, மண்ணிலே காரண குணங்களாகிய சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம் இத்துடன் இதன் உண்மைக் குணமாகிய கந்தம் ஆகிய இவைகள் வெளிப்படுகின்றது.

முன் சூக்ஷும பூதங்களினின்றும் சூக்ஷும சரீரங்கள் தோன்றினாற் போலப் பஞ்சீகரணம் ஆன ஸ்தூல பூதங்களில் இருந்தும், ஆறு வகைத் தத்துவங்களாய், நான்கு வகைப் பிறப்புகளாய், மூன்று வகைச் சாதிகளாய் இருக்கின்ற ஸ்தூல சரீரங்கள் உண்டாயின.

அந்த வகையிலே,

## ஆறு வகைத்தத்துவங்கள்:-

1. தோல், 2. இரத்தம், 3. மாமிசம், 4. மஜ்ஜை, 5. எலும்பு, 6. நரம்பு போன்றவைகள் ஆகும்.

## நான்கு வகைப் பிறப்புகள்:-

1. **அண்டஜம்**: முட்டையில் தோன்றுவன (பறவைகள், மீன்கள், பாம்புகள்)

2. **சுவேதஜம்**: வியர்வையில் தோன்றுவன (பேன், கிருமி)

3. **உத்பீஜம்**: விதை, வேர், கிழங்கு இவற்றில் தோன்றுவன (மரம், செடி, கொடி)

4. **சராயுஜம்**: கருப்பையில் தோன்றுவன (விலங்கு, மனிதர்)

## மூன்று வகைச் சாதிகள்:-

1. உத்தம சாதி: மனிதன்.
2. மத்திம சாதி: பசு, பக்ஷி முதலியன.
3. அதம சாதி: மரம், செடி, கொடி முதலியவைகள்.

இவ்வாறு, இந்த பூலோகத்தில் பஞ்ச பூதங்களினால் உடல் கிடைத்தவாறே, மற்ற லோகங்களான பித்ரு லோகம், தேவலோகம், யட்ச லோகம், கந்தர்வ லோகம், சித்தர் லோகம் போன்றவைகளில் நட்சத்திரங்களாகத் திகழ்கின்ற சந்திரன் போன்ற பித்ருக்களையும், சூரியன் முதலான தேவதை களையும், கந்தர்வர், சித்தர்கள் போன்றவர்களையும் **உத்தம சாதி** என்று கூறப்படுகின்றது.

காமதேனு, ஐராவதம், அன்னம், கருடன் முதலான வைகளை **மத்திம சாதி** என்று கூறப்படுகின்றது.

கற்பக விருக்ஷம், பாரிசாதம் முதலியவைகளை **அதம சாதி** என்று கூறப்படுகின்றது.

இவ்வாறு கிடைத்த இந்த ஸ்தூல சரீரம் சீவர்களுக்கு பஞ்ச கோஷங்களால் ஆனது. அவைகள், அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்ற ஐந்து கோசங்களும் உள்ளன.

இந்த உணவினாலே உண்டான பருத்த இந்த பரு உடலே **“அன்னமய கோசம்”** எனப்படுகின்றது.

இதிலே, பிராணவாயுவும், கர்மேந்திரியங்களும் கூடிப் **“பிராணமய கோஷம்”** எனப்படுகின்றது.

மனதும், ஞானேந்திரியங்களும் கூடி **“மனோமய கோசம்”** எனப்படுகின்றது.

புத்தியும், ஞானேந்திரியங்களும் கூடி, **“விஞ்ஞானமய கோசம்”** எனப்படுகின்றது.

இந்த ஸ்தூல உடல் உண்டாவதற்குக் காரணமான காரண சரீரமே **“ஆனந்தமய கோசம்”** எனப்படுகின்றது.

தோல், இரத்தம், மஜ்ஜை, மாமிசம், எலும்பு, நரம்பு போன்ற ஆறு தத்துவங்களைக் கொண்ட இந்த ஸ்தூல சரீரத்தினிடத்திலே, இருபது தத்துவங்களாக இருக்கின்ற **‘சூக்ஷும சரீரம்’** இருக்கின்றது.

அந்த இருபது தத்துவங்கள் என்னவெனில்,

கர்மேந்திரியங்களுள் வாக்கும், ஞானேந்திரியங்களில் வாக்குவை (வார்த்தையை) வெளிப்படுத்துகின்ற நாக்கும் இருக்கும். உதான வாயுவும், மனதும் கண்டத்தில் இருக்கும். பிராணவாயுவும், புத்தியும் இருதயத்தில் இருக்கும். சமான வாயுவும், சித்தமும் ஞாபியில் (தொப்புளில்) இருக்கும்.

அபானவாயுவும், பாயுருவும் (எருவாய்) என்பது மலம் கழிக்கும் இடமான குதத்தில் இருக்கும். வியானவாயுவும், ஞானேந்திரியங்களுள் ஒன்றான தோல் போன்றவைகளும் இந்த உடல் முழுவதும் வியாபித்து இருக்கும்.

உச்சியிலே உள்ளமும், கருவிழி நுனியிலே சக்ஷு என்ற இந்திரியமும், காதுகளுக்குள்ளே சுரோத்திரியம் என்கின்ற இந்திரியமும், மூக்கு நுனியிலே கிராணேந்திரியமும் என தலைப்பகுதியில் கழுத்துக்கு மேலே இவைகள் தனித்தனியாக இருக்கும்.

அடுத்து, கழுத்துக்கு கீழே கை, கால், குய்யம் இவைகளில் பாணி (கைகள்), பாதம், உபஸ்தம் (ஆண், பெண் குறி) என மூன்றும் தனித்தனியாக இருக்கும்.

வாய் (பேசும் சக்தி), கை (கொடுக்கல், வாங்கல் சக்தி), கால் (நடக்கும் சக்தி), எருவாய் (மலம் கழிக்கும் சக்தி), கருவாய் (இன்பம் கொடுக்கும் சக்தி) என ஐந்து செயல்களைச் செய்யக்கூடிய **"கர்மேந்திரியங்கள்"** ஐந்தும், காது, மூக்கு, கண்கள், நாக்கு, தோல் என **"ஞானேந்திரியங்கள்"** ஐந்தும், பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என **"ஐந்து வாயுக்கள்"** எனவும், இத்துடன் மனம், புத்தி, சித்தம், அஹங்காரம், உள்ளம் என்ற **"அந்தக்கரணங்கள்"** ஐந்தும் என மொத்தம் <u>இருபது தத்துவங்களும்</u> சேர்ந்து **சூக்ஷும சரீர** தத்துவமாகக் கொள்வர்.

ஆக ஸ்தூல சரீர தத்துவங்கள் ஆறும், சூக்ஷும சரீர தத்துவங்கள் இருபதும் என இருபத்து ஆறு தத்துவங்களும் பஞ்ச பூதங்களின் காரியம் ஆனபடியால், இதை ஒருமைப் பாடாகிய காரிய சரீரம் (செயல் செய்யக்கூடிய பரு உடல்) என்று கூறப்படுகின்றது.

அதாவது காது முதலான ஞானத்தை கொடுக்கின்ற ஐந்து இந்திரியங்களை பயன்படுத்தி, சப்தம் என்ற விசயத்தை கிரகிப்பதுப் போல, மற்ற இந்திரியங்களின் துணைக் கொண்டு மற்ற விசய அனுபவங்களைப் பெறுவதே இந்த ஸ்தூல சரீரம் ஆகும்.

அறியாமையிலே பிரதிபிம்பித்த சிதாபாஸன் விழிப்பு நிலையிலே இங்கு ஸ்தூல சரீர அபிமானியான **"நான்"** என்ற இந்த ஆன்மா **"விஸ்வன்"** என்று அழைக்கப்படுகிறான். இவனையே **'வியாவகாரிக சீவன்'** என்றும் கூறலாம்.

கனவு நிலையிலே இந்த பரு உடலான ஸ்தூல சரீரத்தை விட்டு, அந்தக்கரணத்துடன் கூடி, சூக்ஷும சரீர அபிமானியான **"நான்"** என்ற இந்த ஆன்மா **"தைஜஸன்"** என்று அழைக்கப்படுகிறான். இவனையே **'பிராதிபாசிக சீவன்'** என்றும், **'சொப்பன கற்பிதன்'** என்றும் கூறலாம்.

அடுத்து, ஆழ்ந்த உறக்கத்தில் இரண்டு விஷயங்கள் உள்ளன. ஒன்று **அறியாமை,** இனி ஒன்று **ஆனந்தம்** என உள்ளது.

உறங்கி விழித்தெழுந்தவுடன் நான் எதையும் அறிய வில்லை, ஆனால், ஆனந்தமாக உறங்கினேன் என்று கூறுவதிலிருந்தே இந்த இரண்டும் இருப்பது தெரிகின்றது.

எங்கு முழுமையான அறியாமையும், முழுமையான ஆனந்தமும் அனுபவிக்கப்படுகின்றதோ, அது ஆழ்ந்த உறக்கம் எனப்படும்.

இந்த ஆழ்ந்த உறக்கத்தில், காரண சரீரத்தில் மட்டுமே நம்முடைய அபிமானம் இருக்கும். அதாவது, காரண சரீர அபிமானியான **"நான்"** இந்த இருப்பத்தாறு தத்துவங்களையும் கைவிட்டு விட்டு, காரண சரீரத்தை மட்டும் அபிமானித்துக் கொண்டு, அதனுடன் கூடி இருக்கின்ற பொழுது, **"பிராஜ்ஞன்"** என்று அழைக்கப்படுகிறான். இவனையே, **'பாரமார்த்திக சீவன்'** என்று அழைக்கப்படுகின்றது.

இதுபோன்று, சீவனானவன் **விஸ்வன், தைஜஸன், பிராஜ்ஞன்** என மூன்று நிலைகளிலும் இருக்கின்றான்.

ஆனால், ஆன்மாவோ, இந்த மூன்று அவஸ்தைகளுக்கும் சாட்சியாக (அவஸ்தா திரய சாட்சியாக) இருக்கின்றது.

அதாவது, பிரம்ம சைதன்யம் விழிப்பு நிலைக்கு சாட்சியாக (அதாவது, செயல்கள் செய்யாமலும், அனுபவிக்காமலும் வேடிக்கை மட்டும் பார்த்துக் கொண்டிருக்கின்ற நிலையில்) இருக்கும் பொழுது, **சிவாத்மா** என்றும், கனவு நிலையில் அதே போன்று சாட்சியாக இருக்கின்ற பொழுது, **அந்தராத்மா** என்றும், ஆழ்ந்த உறக்க நிலையில் சாட்சியாக இருக்கின்ற பொழுது **பரமாத்மா** என்றும், இந்த மூன்று அவஸ்தைகளுக்கும், அவஸ்தா திரய சாட்சியாக இருக்கும் பொழுது **'ஞானாத்மா'** என்றும், **'கூடஸ்தன்'** என்றும் அழைக்கப்படுகின்றது.

(பிரம்மா முதல் எறும்பு வரை உள்ள எல்லாப் பிராணிகளின் புத்திகளிலும் ஏற்றத்தாழ்வுகள் இன்றி,

அனைத்திலும் காணக்கூடியவனாய், எல்லாப் பிராணிகளின் புத்திகளிலும் உறைகின்ற **“கூடஸ்தன்”** எனப்படுகின்றது.)

இவ்வாறு சீவனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவஸ்தைகளும் கூறப்பட்டன.

சீவன் என்பதற்கு ஸ்தூல சரீரம் இருக்கலாம். அல்லது இல்லாமலும் இருக்கலாம். சீவன் என்பவன் ஆன்மாவும், சிதாபாஸமும், சூக்ஷும சரீரமும் கூடியது ஆகும்.

(**சீவன்** = சூக்ஷும சரீரம் + சித் + சிதாபாஸம்).

**சீவன்** என்பவன் *சித்தும், சிதாபஸமுடன்* கூடிய **சூக்ஷும சரீரம்** என்று அறியவும்.

அதுப்போலவே, **ஈஸ்வரன்** என்பவன் *மாயை* என்ற ஒன்றையும், அந்த மாயை எதைச் சார்ந்து உள்ளதோ அந்த *பிரம்மமும்* சேர்ந்த **தத்துவம்** என்று அறியவும்

இனி ஈஸ்வரனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவஸ்தைகளையும் பார்க்கலாம்.

(**ஈஸ்வரன்** = மாயை + பிரம்மம்).

இந்த மாயையைத் தனியாக காண இயலாது. இதை பிரம்மத்துடன் சேர்ந்துதான் காண இயலும். இந்த மாயையும் ஜடம் ஆகும். இந்த மாயை பிரம்மத்திடமிருந்து சைதன்யத்தை (அறிவை) வாங்கிக் கொண்டு **“ஈஸ்வரன்”** ஆகின்றது. எனவே பிரம்மத்திடமிருந்து பிரதி பிம்பிக்கின்ற சேதனத்தை பெற்ற மாயையை **“ஈஸ்வரன்”** என்று அழைக்கின்றோம்.

சீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் இருக்கும் உறவைப் பார்த்தோமானால், நாம் ஏற்கனவே பார்த்தது போல அவர் படைப்பவர், நாம் படைக்கப்பட்டவர். அவர் பேரறிவாளன், நாம் சிற்றறிவாளன். இதைத்தான் சாதாரணமாக நாம் அறிந்துக் கொண்டுள்ள விஷயம்.

சீவனிடமிருக்கின்ற சிதாபாஸன், ஈஸ்வரனிடம் இருக்கின்ற மாயை என்ற இரண்டுக்கும் அடிப்படையில் நாம் பார்த்தோமானால் **பிரம்மம்** ஒன்றே உள்ளது.

ஆகவே, நாம் மற்றொரு கோணத்தில் இந்த ஈஸ்வரனுக்கும், சீவனுக்கும் ஆதாரமான பிரம்மத்தை அடிப்படையாகக் கொண்டு பார்த்தோமானால், ஈஸ்வரனிட மிருக்கின்ற சத், சித், ஆனந்தமும், சீவனிடம் இருக்கின்ற சத், சித், ஆனந்தமும் ஒன்றேயான அந்த பிரம்மத்திடமிருந்து வந்துள்ளன என்பதினால் உண்மையில் சீவர்களாகிய நாமும், ஈஸ்வரனும் ஒன்றே என்ற உறவு வெளிப்படுகின்றது.

இத்தகைய சீவனும், பிரம்மமும் ஒன்றே என்பதை வலியுறுத்தி வேதங்களில் கூறப்பட்ட வாக்கியங்களைத் தான் **“மஹா வாக்கியங்கள்”** என்று சாஸ்திரம் அழைக்கின்றது.

இந்த மஹா வாக்கியங்கள் பல இருப்பதற்குக் காரணம், வேதங்களை பலவாறாக பிரித்து படிக்கின்றமையால், ஒவ்வொரு வேதங்களிலும் பல மஹா வாக்கியங்கள் காணப் படுகின்றன. அவைகளில் சில **“பிரஹ்ஞானம் பிரம்மம்”, “தத் துவம் அஸி”, “அஹம் பிரம்மாஸி”, “அயம் ஆத்மா பிரம்மம்”,** என்று பல மஹா வாக்கியங்களாகக் காணப்படுகின்றன.

இந்த அனைத்து மஹா வாக்கியங்களும் கூறுகின்ற விசயம் ஒன்றே. இதை விசாரித்து அறிந்து கொண்டால், அது சீவர்களாகிய நாமும், அந்த பிரம்மமும் ஒன்றே என்பதை பல வேத விளக்கங்களுடன் பல ரிஷிகளால் கூறப்படுகின்றன.

எந்த ஒரு வேத வாக்கியம் சீவனையும், ஈஸ்வரனையும் ஒன்று என்று கூறுகின்றதோ, அந்த வாக்கியத்தை **"மஹா வாக்கியம்"** என்று சாஸ்திரம் அழைக்கின்றது. இதை அறிவதே **'ஞானம்'** ஆகும்.

இந்த ஞானத்தை எந்த வாக்கியம் உபதேசிக்கின்றதோ அந்த வாக்கியம் **"மஹாவாக்கியம்"** ஆகும்.

சீவன் என்ற சொல்லை பயன் படுத்தினாலேயே அது உணர்வுமயமான ஒரு சேதன தத்துவத்தினை கூறுவதாகும். இந்த ஜீவனானவன் பிரம்மத்தினுடைய பிரதி பிம்பமாக இருக்கின்றான். ஒரே பிரம்மன் ரஜோ குணத்தில் பிரதி பிம்பித்தால் அந்த இடத்திற்கு **'சீவன்'** என்றும், அதே பிரம்மன் சத்துவ குணத்தில் பிரதி பிம்பித்தால் அது **'ஈஸ்வரன்'** என்றும் அழைக்கப்படுகின்றது.

மாயா என்ற தத்துவம் பிரம்மத்திடமிருந்து **இருத்தல் (சத்)**, **அறிவு (சித்)** என்ற இரண்டு தத்துவங்களை வாங்கிகொண்டு பிரதிபிம்பிக்கின்றது என்பதே உண்மை ஆகும்.

இவ்வாறு பிரம்மத்தின் இரண்டு குணங்களை வாங்கிக் கொண்டு, வெளிப்படுத்தும் மாயைக்கு மற்றொரு பெயர்தான் **“ஈஸ்வரன்”** என்பதாகும்.

எனவே, பிரம்மத்தின் துணைகொண்டு, பிரம்மத்தின் குணங்களான இருப்பும் (சத்), அறிவும் (சித்) தன்னுடைய ஸ்வரூபமாக வெளிப்படுத்துகின்ற மாயைக்கு **“ஈஸ்வரன்”** என்று பெயர்.

அதாவது பிரம்மத்துடன் கலந்த சிருஷ்டி கர்த்தாவான மாயையே ஈஸ்வரன் என்பதாகும். **பிரம்மமும், மாயையும் சேர்ந்தது ஈஸ்வரன்** எனலாம்.

மாயைக்குள் இருக்கின்ற அறிவு ஸ்வரூபமான ஈஸ்வரன் இந்த உலகத்தைப் படைத்தார் என்பதை அறிந்து கொண்டு, இப்படிப் படைக்கப்பட்ட இந்த பிரபஞ்சத்தில் கோடாணுகோடி விண்மீன்களும், கோள்களும், சூரிய, சந்திரன்களும் இருப்பதுப்போல, இந்த பிரபஞ்சத்தில் பூமியில் மனிதர்களாக அந்தப் பரப்பிரம்மத்தின் *இருப்பு (சத்), அறிவு (சித்),* மற்றும் *ஆனந்தம்* என்ற மூன்று குணங்களையும் பிரதிபிம்பிக்கின்ற ஒரு உபாதியாக சீவர்களாகிய நாமும் இருக்கின்றோம் என்பதே உண்மை.

அதாவது இங்கு அனைத்து சீவர்களின் காரண சரீரங்கள் சேர்ந்த நிலையில் உள்ள மாயை ஆனது சமஸ்டி என்றும், இதில் சத்துவ குணத்திலே பிரம்மம் பிரதிபிம்பிக்கின்ற போது இதை **‘ஈஸ்வரன்’** என்றும், தனித்த சூக்ஷும சரீரம் ஒடுங்கிய காரண சரீரத்தை வியஸ்டி என்றும், இதில் ரஜோ

குணத்தில் பிரம்மம் பிரதிபிம்பிக்கின்ற போது இதை **‘சீவன்’** என்றும் அழைக்கப்படுகின்றது.

இந்த கற்பித்துக் கொண்ட, பிரபஞ்ச வடிவமாக தோன்றுகின்ற ஸ்தூல பஞ்ச பூதங்களும், அந்தப் பூதங்களிலே தோன்றிய மூன்று சாதிகளான உத்தம சாதியிலே மனிதன், மத்திம சாதியிலே பசு, பறவைகள், மற்றும் அதம சாதியில் தாவரங்கள் என எடுத்துக் கொண்ட ஸ்தூல சரீர சமஷ்டியும் கூடி, ஈஸ்வரனின் ஸ்தூல சரீரம் என்றும், **“விராட்”** என்றும் கூறப்படும்.

இதனுடனே கூடி விழிப்பு நிலை அவஸ்தையில் ஈஸ்வரன் **“வைசுவானரன்”** என்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டானமான சைதன்யம் படைக்கும் கடவுளான பிரம்மா என்றும் கூறப்படுகின்றது.

மேலும், சூக்ஷும ஐந்து பூதங்களும், அந்த பூதங்களிலே தோன்றிய சூக்ஷும சரீர சமஷ்டியும் கூடி, அதாவது, அனைத்து சூக்ஷும சரீரங்களையும் எனது என்று அபிமானிக்கின்ற ஈஸ்வரனுக்கு **‘ஈஸ்வர சூக்ஷும சரீரம்’** அல்லது **“ஹிரண்யகர்பன்”** என்று பெயர்.

ஈஸ்வரனின் ஸ்தூல சரீரமான விராட் என்ற இதனுடன் கூடி, கனவு நிலை அவஸ்தையிலே ஈஸ்வரன் **“சூத்திராத்மா”** என்றும், இந்த இருவகைக்கும் அதிர்ஷ்டானமான சைதன்யம் காக்கும் கடவுளான **“விஷ்ணு”** என்றும் கூறப்படுகின்றது.

இத்தகைய ஸ்தூல, சூக்ஷும இரண்டின் வாசனையுடனே கூடியிருக்கின்ற மாயை **"ஈஸ்வர காரண சரீரம்"** என்றும் அவ்வியாகிருதம் என்றும் கூறப்படுகின்றது. இதனுடன் கூடி, ஆழ்ந்த உறக்க நிலை அவஸ்தையிலே ஈஸ்வரன் **"அந்தர்யாமி"** என்றும், இந்த இருவகைக்கும் அதிர்ஷ்டான மான சைதன்யம் ஒடுக்கும் கடவுளான **"உருத்திரன்"** என்றும் கூறப்படுகின்றது.

## காரண சரீர விளக்கம்

======================

ஐந்து கோசங்களில் முதலில் கூறப்பட்ட அன்னமய கோசமாக விளங்கும் பருவுடலே ஸ்தூல சரீரம். அடுத்து உள்ள பிராணமய கோசம், மனோமய கோசம், மற்றும் விஞ்ஞானமய கோசங்களின் தொகுப்பே சூக்ஷும சரீரம். இந்த இரண்டிற்கும் காரணமாக விளங்குவதே **'காரண சரீரம்'** எனப்படும்.

உறங்கும் போது, உடலுக்கும், மனதுக்கும் இருப்பு இல்லாதபோது, நாம் சார்ந்திருப்பது, நம்மை சம்பந்தப்படுத்திக் கொள்வது, தொடர்புபடுத்திக் கொள்வது அனைத்தும் காரண சரீரத்துடனேயே ஆகும். இதுவே அறியாமைகளின் மொத்த தொகுப்பு.

அந்த ஸ்தூல சரீரத்தால் படைக்கப்படும், அனுபவிக்கப்படும் எந்த விஷயத்துடனும், நம்மை நாம் சம்பந்தப்படுத்திக் கொள்வதில்லை. அதாவது, விழிப்பு

நிலையில், நனவுலகின் எந்தப் பொருளோடும், நிகழ்வோடும் நாம் சம்பந்தப் படுவதில்லை.

அதேப் போன்று, சூக்ஷும சரீரத்தால் உறக்க நிலையில், படைக்கப்படும், அனுபவிக்கப்படும் எந்த விஷயத்துடனும், நம்மை நாம் சம்பந்தப்படுத்திக் கொள்வதில்லை. அதாவது, கனவுலகின் எந்தப் பொருளோடும், நிகழ்வோடும் நாம் சம்பந்தப்படுவதில்லை. ஆக, **'நான்'** தோன்றுவதில்லை.

**'நான்'** எங்கிருந்து அல்லது எதிலிருந்து தோன்றுகிறது?

காரண சரீரம் இந்தத் தன்மையுடையது அல்லது அந்தத் தன்மையுடையது என்று வார்த்தைகளால் விளக்க முடியாது.

அது நிலையானதாகவும் இல்லாமல், நிலையற்றதாகவும் இல்லாமல் இருப்பதினால், அதை **"அநிர்வசனீயம்"** என்று சாஸ்திரம் அழைக்கின்றது.

அதாவது, சரீயாக நிரூபிக்க முடியாதது. அதனால், காரண சரீரமே **'மாயை'** எனப்படும்.

**'மா'** என்றால் ஒடுங்குதல் என்றும், **'யா'** என்றால் விரிதல் என்றும் பொருள். இந்த மனம் விரிந்து இந்த உலகம் தோன்றுவதற்கும், ஒடுங்கி உலகம் மறைவதற்கும் இந்த காரண சரீரம் என்ற மாயையே காரணம் ஆகும்.

மாயை எனும் சொல்லே உலகம் தன்னிலிருந்து தோன்றுவதற்கும், தன்னில் வந்து ஒடுங்குவதற்கும் அடிப்படைத் தத்துவம் ஆகும்.

அப்படிப்பட்ட இந்த காரண சரீரத்தை நிலையானதா, நிலையற்றதா என அறிய முடியாததாக இருப்பதினாலும், அதில் புதைந்துள்ள அறியாமைகள் வெளிப்படாத நிலையில் அது விதை (பீஜம்) வடிவாக இருக்கும் நிலையை **'அவ்யக்தம்'** என்று சாஸ்திரம் கூறுகின்றது.

அதாவது, காரண சரீரம் வெளிப்படாத நிலையில் அவ்யக்தமாக (வெளிப்படாததாக) இருக்கின்றது.

நாம் உறங்கும் போது என்ன நிகழ்கின்றது? என்றால், இதுவரை விழிப்பு நிலையில், இந்த ஸ்தூல சரீரத்தினால், நாம் பெற்ற அனுபவங்கள் யாவும் ஒரு விதையாக, அதாவது, வெளிப்படாமல் அவ்யக்தமாக ஒடுங்குகின்றன.

அதுபோன்றே, கனவு நிலையில் சூக்ஷ்ம சரீரத்தினால், நாம் பெற்ற அனுபவங்கள் யாவும் ஒரு விதைப் போன்று அவ்யக்தமாக ஒடுங்குகின்றன. இவ்வாறு ஒடுங்கும் இடமே காரண சரீரம் ஆகும்.

இந்த விழிப்பு, மற்றும் கனவு நிலை அனுபவங்கள் யாவும், ஆழ்ந்த உறக்க நிலையில் தோன்றாமல் இருக்கின்றன.

ஸ்தூல தேகத்துக்கும், சூக்ஷ்ம தேகத்துக்கும் இருக்கும் எல்லா உணர்வுகளும் ஒடுங்கிய நிலை இந்த ஆழ்ந்த உறக்க நிலை எனலாம்.

மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் ஆகிய எல்லாமே விதை வடிவில், பீஜமாக ஒடுங்கிய நிலை ஆழ்ந்த உறக்கம் ஆகும்.

நாம் உறக்கத்திலிருந்து விழிப்பு நிலைக்கு வரும் போது, நாம் காரண சரீரத்தை விடுத்து, ஸ்தூல சரீரத்தை அபிமானிக்கின்றோம். உடனே, அதுவரை, பீஜங்களாக ஒடுங்கி இருந்த அனுபவங்கள் யாவும், வளர்ந்து விரிவடைகின்றன. அதாவது வ்யக்தமாகின்றன (வெளிப்படுகின்றன).

நாம் உறக்கத்திலிருந்து கனவு நிலையை அடையும் போது, காரண சரீரத்தை விடுத்து, சூக்ஷ்ம சரீரத்தை அபிமானிக்கின்றோம். அப்போதும், அதுவரை விதைகளாக நம்மில் ஒடுங்கியிருந்த அனுபவங்கள் யாவும், வளர்ந்து விரிவடைகின்றன.

இதனாலேயே, உறக்கத்திலிருந்து விழித்தவுடன், உறங்குவதற்கு முன் நின்ற நினைவுகள் யாவும், மீண்டும் விட்ட இடத்திலிருந்தே தொடர்கின்றன. பல நேரங்களில், கனவு அனுபவங்கள் விழித்த பின்னும், நினைவில் இருக்கின்றன.

நாம், எப்பொழுதெல்லாம், காரண சரீரத்துடன் சம்பந்தப்பட்டு இருக்கின்றோமோ, அப்பொழுதெல்லாம்,

எவ்வித அனுபவமும் இன்றி, ஏதும் அறியாத நிலையில் (ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பது போல) இருக்கின்றோம்.

இந்த நிலை **அறியாமை நிலை** அல்லது **அவித்யை நிலை** எனப்படும்.

பொதுவாக, எண்ணங்களினால் உண்டாகின்ற மனோ விகாரங்கள் காலம் மற்றும் இடத்தை ஆதாரமாகக் கொண்டே உண்டாகின்றது.

உறக்கத்தில், நாம் காலம், இடம் ஆகியனவற்றை உணராமலேயே இருக்கின்றோம். காரண சரீரம், இடம், காலம் ஆகியவைகளை அறியாத நிலையில் (அறியாமையில்) நம்மோடு சம்பந்தப்படுகின்றது. அதனால், காரண சரீரம், மாறுதல் அடையாததாக உள்ளது.

நாம் உறங்கும் போது ஆனந்தமாக உறங்கிக் கொண்டிருக்கின்றோம் என்று உணர்வதில்லையே தவிர, விழித்தவுடன், நாம் அதுவரை ஆனந்தமாக உறங்கினோம் என்று உணரவே செய்கிறோம்.

சரி, நாம் உறங்கும் போது ஆனந்தமாக இருந்தோம். அதாவது, எப்போதெல்லாம், ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களை விடுத்து, காரண சரீரத்தை மட்டும் அபிமானிக்கின்றோமோ, அப்போதெல்லாம் ஆனந்தமாக இருக்கின்றோம்.

உறங்கும் போது ஸ்தூல சரீரமும், சூக்ஷம சரீரமும், செயல்படாது ஓய்ந்து விடுகின்றன. உடனே நாம் ஆனந்தமயமாகின்றோம்.

உறக்கத்தில் எல்லா இந்திரியங்களும் ஒடுங்கி விடுகின்றன. புத்தியின் விருத்தியும் ஒடுங்கி விடுகின்றது. நாம் முழு அறியாமையில் இருக்கின்றோம். ஆக, உறக்கத்தில் காரண சரீரத்தை முழு அறியாமையில் அபிமானித்து இருக்கிறோம் என்று பொருள்.

உறக்கம் என்பது ஆனந்தம் தருவது என்பதினால், அதுவே ஆனந்தம் என்று தவறாக பொருள் கொள்ளக்கூடாது. நம், நித்திய அனுபவங்களில், உறக்கம் ஒன்றே, ஆனந்தத்திற்கு வெகு அருகில் அனுபவமாகின்றது.

உறங்கும் போது வருகின்ற ஆனந்தம் எதன் ஆதாரத்தில் விளைகின்றது என்று தெரிந்து கொண்டால், அதை மீண்டும், மீண்டும் அடையலாமே, முடிந்தால் அதிலேயே நிரந்தரமாக, லயித்திருக்கலாமே.

உறக்கத்தில், அறியாமையில் காரண சரீரத்துடன் நமக்கு ஏற்படும் தொடர்பு, விழித்தபின், சில நொடிகளுக்கே நிலைத்து இருக்கின்றது. ஆகவே, உறக்கத்தால் விளைந்த ஆனந்தத்தின் இருப்பும், நேரமாக, ஆக நீர்த்து விடுகின்றது.

விழிப்பு நிலையில் இருக்கும் போது, சில நேரங்களில், காரண சரீரத்தை அபிமானிக்கின்றோம்.

அந்த நிலைகளை, ப்ரியம், மோதம், ப்ரமோதம் என மூன்று நிலைகளாக சாஸ்திரம் அறிவுறுத்துகின்றது.

சீவன் தன் மூன்று அவஸ்தைகளிலும்

இதில், நமக்குப் பிடித்த, நாம் ஆசைப்படும் பொருளைக் காண்பதால் ஏற்படும் மகிழ்ச்சி **'ப்ரியம்'** எனப்படும்.

அந்தப் பொருள் நம் கைக்கு கிடைத்து நம்முடையது என்று ஆவதால் உண்டாகும் மகிழ்ச்சி, **'மோதம்'** எனப்படும்.

அந்தப் பொருளை நாம் அனுபவிப்பதால் ஏற்படும் மகிழ்ச்சி **'ப்ரமோதம்'** எனப்படும்.

இந்த மூன்று நிலைகளிலும், மனம் அடங்கி ஆனந்தம் உண்டாகின்றது என்பதை நாம் நன்கு அறிவோம்.

அதாவது விழிப்பு நிலையிலும் நாம் காரண சரீரத்தை அபிமானிப்பதாலேயே இந்த ஆனந்தம் உண்டனது என்பது தற்பொழுது நன்கு விளங்கும். அத்தகைய இந்த காரண சரீரமே **“ஆனந்தமய கோசம்”** எனப்படுகின்றது.

ஆனாலும், இந்த ஆனந்தமும், அறியாமையில் விளைந்த ஆனந்தமே ஆகும். ஏனெனில், அந்தச் சில

கணங்கள், நாம், நம் புத்தி நிலை கொண்டுள்ள சூக்ஷம தேகத்தின் தொடர்பில்லாமல் தான் இருந்தோம்.

அப்பொழுது, காரண சரீரத்தை மட்டுமே முழுவதுமாக அபிமானித்து இருக்கின்றோம் என்பதினால், நாம் அறியாமையிலேயே இருக்கின்றோம். ஆதலால்தான், இந்த ஆனந்தமும் நிலைப்பதில்லை.

எண்ணங்களற்று, உணர்வுடன் பொருந்தி இருக்கின்ற நிலையே உண்மையான ஆனந்தம் எனப்படும்.

எதையாவது அடைய விரும்பும் எண்ணம் நம் மனதில் உண்டாகி, அந்த எண்ணம் செயலாகி, அந்த செயல் நிறைவடைந்தவுடன், உண்டாகின்ற திருப்தி என்பது, நாம் நம் உணர்வுடன் இணைந்து விடுவதினால் உண்டாகின்றது.

அதாவது, எண்ணங்களற்று, உணர்வு மாத்திரமாக நாம் மாறியதும் ஆனந்தத்தில் திளைக்கின்றோம். அப்பொழுதே முழுமையான ஆனந்தமயமாகின்றோம்.

மீண்டும் எண்ணம் எழ, மனம் பிரவிருத்தியாகி, ஆனந்தத்தை மறக்கின்றோம்.

இங்கு **காரண சரீர விளக்கம்** கூறப்பட்டது.

சீவன் தன் விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் என்ற மூன்று அவஸ்தைகள், ஸ்தூல உடல், சூக்ஷும உடல், காரண

உடல் என்ற மூன்று உடல்கள், ஐந்து பிராணன்கள், ஐந்து கர்ம இந்திரியங்கள், ஐந்து ஞான இந்திரியங்கள், அந்தக்கரணங்கள் ஐந்து, இத்துடன் அதிர்ஷ்டான சைதன்யமான ஆன்மா என மொத்தம் இருபத்தேழு தத்துவங்களுடன் **"நான்"** என்று கலந்து நிற்கின்றது.

இதுப்போன்றே ஈஸ்வரனும் விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் என்ற மூன்று அவஸ்தைகள், ஸ்தூல உடல், சூக்ஷும உடல், காரண உடல் என்ற மூன்று உடல்கள், ஐந்து பூதங்கள், ஐந்து பிராணன்கள், ஐந்து கர்ம இந்திரியங்கள், ஐந்து ஞான இந்திரியங்கள், அந்தக்கரணங்கள் ஐந்தும், இத்துடன் அதிர்ஷ்டான சைதன்யமான ஆன்மா என மொத்தம் முப்பத்து இரண்டு தத்துவங்களுடன் **"நான்"** என்று ஈஸ்வரன் கலந்து நிற்கின்றான்.

ஆகையினாலே, சீவ சிதாபாஸன் தன் தேகத்தில் மாத்திரம் கலந்து நிற்கிற **"வியஷ்டி சரீரம்"** உடையவன். அதாவது, தனித்த சரீரத்தை உடையவன்.

ஈஸ்வரன் எல்லா ஸ்தூல தேகங்களையும் சேர்த்து, சமஸ்டி என்ற ஒன்றேயான தன்னுடைய ஸ்தூல தேகமாகவும், எல்லா சூக்ஷும தேகங்களையும் சேர்த்து, ஒன்றேயான தன்னுடைய சூக்ஷும தேகமாகவும், எல்லாக் காரண தேகங்களையும் சேர்த்து, தன்னுடைய ஒரே காரண தேகமாகவும் கொண்டு, அனைத்து பிரபஞ்சங்களிலும் கலந்து நிற்கின்ற **"சமஸ்டி சரீரம்"** (ஒன்றேயான உடல்) உடையவன்.

இந்த இருவகைக்கும் சாட்சியாக இருக்கின்ற பிரம்ம சைதன்யம் சகல சரீரங்களிலும், சகல பிரபஞ்சங்களிலும் நிறைந்து, அணுவுக்கு அணுவாகவும், அப்பாலுக்கு அப்பாலும் அனைத்து திக்குகளையும் ஆக்கரமித்து எல்லையில்லாமல் பரந்து இருக்கும்.

தத்துவங்கள் சீவ, ஈஸ்வர விவகாரங்களுக்கு பலவாறாகக் கூறப்படுகின்றன.

அவைகள் பின்வருமாறு:-

ஸ்தூல சரீர விவகாரத்திற்காக, பஞ்ச கோசங்கள் என்ற ஐந்தும், சூக்ஷும சரீர தத்துவங்கள் என்ற இருபதும், சீவன், ஈஸ்வரன், அவித்தை, வித்தை, பிரம்மம் என்ற ஐந்தும் என மொத்த தத்துவங்கள் முப்பத்து ஒன்று (31) கூறப்படுகின்றன.

சூக்ஷும சரீர விவகாரத்திற்காக, சூக்ஷும சரீர தத்துவங்கள் என்ற இருபதும், சீவன், ஈஸ்வரன், அவித்தை, வித்தை, பிரம்மம் என்ற ஐந்தும் என மொத்த தத்துவங்கள் இருபத்து ஐந்து (25) கூறப்படுகின்றன.

காரண சரீர விவகாரத்திற்கு சீவன், ஈஸ்வரன், அவித்தை, வித்தை, பிரம்மம் என்ற ஐந்தும் (5) கூறப்படுகின்றன.

சீவ விவகாரத்திற்கு சீவன், ஈஸ்வரன், பிரம்மம் என மூன்று (3) மட்டும் கூறப்படுகின்றன.

சாக்ஷி விவகாரத்திற்கு சாட்சி என்ற ஒன்று (1) மட்டும் கூறப்படுகின்றது.

ஈஸ்வரனுக்கு ஸ்தூல சரீர சமஷ்டி (ஒன்றேயான உடல்) விவகாரத்திற்கு பஞ்ச கோசங்கள் என்ற ஐந்தும், சூக்ஷும சரீர தத்துவங்கள் இருபதும், சீவன், அவித்தை, மாயை என்ற மூன்றும், ஈஸ்வரன், வித்தை, பிரம்மம் என்ற மூன்றும், ஸ்தூல பூதங்கள் ஐந்தும் என மொத்தம் முப்பத்து ஆறு (36) தத்துவங்கள் கூறப்படுகின்றது.

ஈஸ்வரனுக்கு சூக்ஷும சரீர சமஷ்டி (ஒன்றேயான உடல்) விவகாரத்திற்கு சூக்ஷும சரீர தத்துவங்கள் இருபதும், சீவன், அவித்தை, என்ற இரண்டும், பூதங்கள் ஐந்தும், ஈஸ்வரன், வித்தை, பிரம்மம் என்ற மூன்றும், என மொத்தம் முப்பத்து (30) தத்துவங்கள் கூறப்படுகின்றது.

ஈஸ்வரனுக்கு காரண சரீர விவகாரத்திற்கு ஈஸ்வரன், வித்தை, பிரம்மம் என்ற மூன்று (3) தத்துவங்கள் கூறப்படுகின்றது.

ஈஸ்வர விவகாரத்திற்கு ஈஸ்வரன், பிரம்மம் என்ற இரண்டு (2) மட்டும் கூறப்படுகின்றது.

பிரம்ம விவகாரத்திற்கு பிரம்மம் ஒன்று (1) மட்டும் கூறப்படுகின்றது.

இந்திரிய விவகாரத்திற்கு இந்திரியம் ஒன்று, கோசங்கள் ஐந்து, அந்தக்கரணங்கள் ஐந்து, வாயுக்கள் ஐந்து, இத்துடன், சீவன், ஈஸ்வரன், மாயை, அவித்தை, வித்தை, பிரம்மம் என ஆறு, ஆக மொத்தம் இருபத்து இரண்டு (22) தத்துவங்கள் கூறப்படுகின்றது.

மனோராச்சிய விவகாரத்திற்கு அந்தக்கரணங்கள் ஐந்து, சீவன், ஈஸ்வரன், அவித்தை, வித்தை, பிரம்மம் என ஐந்தும் ஆக மொத்தம் பத்து (10) தத்துவங்கள் கூறப்படுகின்றன.

இவ்வாறு தத்துவங்களிடையே தோற்றமும், நிலையும் கூறப்பட்டன.

இனித் தத்துவங்கள் ஒடுங்குகின்ற முறையைக் காணலாம். சகல சீவர்களிடத்திலும் இருக்கின்ற ஸ்தூல சரீரங்கள் அனைத்தும், தமக்கு ஆதாரமாக இருக்கின்ற ஸ்தூல பூதங்களிலே இறந்து, அந்தந்த பூதங்களிலே சென்று ஒடுங்கும்.

இந்த ஸ்தூல பஞ்ச பூதங்களும் பஞ்சீகரணம் செய்யப்படுவதற்கு முன்பு இருந்த தன் மாத்திரைகளாக மிஞ்சும். அதாவது, அனைத்து சூக்ஷும சரீரங்களையும் எனது என்று அபிமானிக்கின்ற ஈஸ்வரனாக, தனித்த **ஹிரண்யகர்பன்** என்ற அவஸ்தையில் மட்டும் இருக்கும்.

இந்த நிலையில், சூக்ஷும சரீர தத்துவங்கள் இருபதும் கட்டவிழ்ந்து, பூதங்களுடைய சத்துவ குணமும், ரஜோ குணமுமாக ஒடுங்கும்.

அது எவ்வாறு எனில்,

சகல சீவர்களிடத்திலும் இருக்கின்ற அஹங்காரமும், கிராணேந்திரியமும் (மூக்கு), உதான வாயுவும், உபஸ்தம் (கருவாய் - குறி) இந்திரியமும் மண் தத்துவமான பிருத்வியில் ஒடுங்கும்.

சித்தமும், சிங்நுவையும் (நாக்கு), சமான வாயுவும், பாயுறு (எருவாய் - மலம் வெளியேறும் இடம்) இந்திரியமும் நீர் தத்துவமான அப்புவில் ஒடுங்கும்.

புத்தியும், சக்ஷுவும், அபான வாயுவும், பாதமும் அக்னியில் ஒடுங்கும்.

மனதும், துவக்கும் (தோல்), பிராண வாயுவும், பாணி (கை), முதலியன வாயுவில் ஒடுங்கும்.

உள்ளமும், சுரோத்திரமும் (காது), வியான வாயுவும், வாக்கும் (பேசும் சக்தி) போன்றவைகள் ஆகாசத்தில் ஒடுங்கும்.

இவ்வாறு, இந்த ஸ்தூல உடலில் உள்ள அனைத்து கர்மேந்திரியங்களும், ஞானேந்திரியங்களும், வாயுக்களும் இதுவரை ஸ்தூலமாக இருந்து, இந்த உடலில் செயல்பட்டுக் கொண்டிருந்தவைகள் எல்லாம், உடல் அழிவுக்கு பிறகு மீண்டும் பழையபடி முக்குண பூதங்களாக சூக்ஷும நிலைக்கு திரும்பி விடும்.

இந்த சூக்ஷும பூதங்களும் மண் மற்றும் நீரில் கரைந்து ஒடுங்கி விடும்.

நீரும், அக்னியில் ஆவியாகி ஒடுங்கும். அக்னியும் வாயுவில் விளக்கு அணைவதுப் போன்று அணைந்து ஒடுங்கும். வாயுவும் ஆகாசத்தில் ஓய்ந்து ஒடுங்கும். ஆகாசமும், விக்ஷேப சக்தியில் ஒடுங்கும்.

ஆவரண சக்தியும், விக்ஷேப சக்தியும் மூலப்பிரக்ருதியின் தமோகுணத்தில் மீண்டும் எப்படி வெளிப்பட்டதோ, அதே வகையில் திரும்பி ஒடுங்குகின்றது.

அதாவது, மிகப்பிரம்மாண்டமான ஆலமரத்தின் விதை எவ்வாறு கடுகு அளவு இருந்து, இவ்வளவுப் பெரிய மரமாக வெளிப்பட்டதோ, அதே ஆலமரம் மீண்டும் தன் கடுகு விதைக்குள் ஒடுங்குவதுப் போன்று இந்த பிரபஞ்ச சிருஷ்டிக்கு விதையாக அவித்தையிலும் (அறியாமையிலும்), மாயையிலும் ஒடுங்கும்.

(அதாவது, உண்மையில் இருப்பதுப் போல தோன்றும் இவைகள் எதுவும் உண்மையல்ல, வெறும் (மாயை) தோற்றம் மாத்திரம்தான் என்ற உண்மை ஞானத்தில் விளங்கும்.)

இந்த அவித்தையும், மாயையும் அதி நுண்மையான மூலப்பிரக்ருதி என்று கூறப்பட்ட விந்து தத்துவத்தில் ஒடுங்கும்.

அந்த விந்துவும், இதுவரை அறியாமையினால் பாம்பாக இருந்துக் கொண்டு ஏமாற்றியது, தக்க சத்குருவின் வழிகாட்டுதலில் அறியாமை விலகியவுடன் மீண்டும் அது பாம்பல்ல கயிறுதான் என்பதைப் போன்று, இந்த மொத்த பிரபஞ்சமும் (ஈஸ்வரனும்) அதிர்ஷ்டான சைதன்யமான பிரம்மத்தில் ஒடுங்கும்.

இந்த அத்தனையையும் விசாரித்து அறிந்துக் கொண்டு, மெய்பொருள் ஒன்றாய் கண்டு, அதுவே தன்னுடைய சுபாவ சித்தமாக இருக்கின்ற, தன்னுடைய உண்மை சொரூபம் என்று தெளிவை அடைந்து, எதைப்பற்றியும் கவலைக் கொள்ளாத, எப்பொழுதும் ஆனந்தமாக இருக்கின்ற ஞானி எவனோ, அவனே **“சீவன் முக்தன்”** எனப்படுகின்றான்.

இவ்வாறு தத்துவங்களின் ஒடுக்கம் கூறப்பட்டது.

இவ்வாறு தோன்றி ஒடுங்கின தத்துவங்கள் முப்பத்து ஆறு (36) உள்ளன.

அவைகள் பின்வருமாறு:-

ஆகாசம், நெருப்பு, காற்று, நீர், நிலம் என பூதங்கள் ஐந்து (5). தோல், இரத்தம், மாமிசம், மஜ்ஜை, எலும்பு, நரம்பு என ஸ்தூல சரீர தத்துவங்கள் ஆறு (6), சூக்ஷூம சரீர தத்துவங்கள் இருபது (20), காரண சரீரமான மாயை, அவித்தை என இரண்டு (2), இவற்றில் பிரதி பிம்பித்த சீவன், ஈஸ்வரன் இரண்டு (2), இவைகளுக்கெல்லாம் அதிர்ஷ்டான

சைதன்யமாய் இருக்கின்ற பிரம்மம் ஒன்று (1) ஆக மொத்தம் முப்பத்து ஆறு (36) தத்துவங்கள் உள்ளன.

இவைகளில் ஐந்து பூதங்கள் (5), மாயை ஒன்று (1), மாயாப் பிரதிபிம்ப ஈஸ்வரன் ஒன்று (1), பிரம்மம் (1) ஆக இந்த எட்டும் சகல சீவர்களுக்கும் பொதுவாக அனுபவிக்கப் படுகின்றது. மற்ற இருபத்து எட்டும் அந்த, அந்த சீவர்களுக்கு வேறு வேறாக அனுபவிக்கப்படும்.

அது எவ்வாறெனில், மண் தத்துவம் ஒன்று இல்லை என்றால், எல்லோருக்கும் வாழ்வதற்கான உணவு, இருப்பிடம் போன்ற ஆதாரம் இல்லை.

நீர் தத்துவம் இல்லை எனில், எல்லோருக்கும் மழை இல்லை. இதனால் உணவு உற்பத்திக்கு வாய்ப்பு இல்லை.

அக்னி தத்துவம் இல்லை எனில், எல்லோருக்கும் சமைக்க நெருப்பு இல்லை.

காற்று தத்துவம் இல்லை எனில், உயிர்கள் இல்லை.

ஆகாச தத்துவம் இல்லை எனில், ஒருவருக்கும் இருப்பதற்கு அவகாசம் இல்லை. அதாவது, இந்த மொத்த பிரபஞ்சமே இந்த ஆகாசத்திலேதான் மிதக்கிக் கொண்டிருக் கின்றது. இந்த ஆகாசமே இல்லை என்றால், இந்த பிரபஞ்சமே இல்லை.

மாயையும், மாயா பிரபஞ்சமும் இல்லை எனில், சமயங்களும், தெய்வங்களும் இல்லை.

பிரம்மம் இல்லை எனில், ஒருவருக்கும் அறிவு இல்லை.

ஆக, இந்த எட்டு தத்துவங்களும் எல்லோருக்கும் அவசியம் இருந்தாக வேண்டும்.

அடுத்து, இருபத்து எட்டு தத்துவங்களை வேறு, வேறாக எப்படி அனுபவிக்கப்படுகின்றது என்பதைக் காணலாம்.

ஒருவனுக்கு ஸ்தூல சரீரம் (பரு உடல்) இறந்தால், மற்ற யாருக்கும் ஸ்தூல சரீரம் இறப்பதில்லை. சூக்ஷும சரீரத்தின் வாயிலாக ஒருவனுக்கு உடல் ஊனம் இருந்தால், மற்றவர்களுக்கு அவ்வாறு உடல் ஊனம் இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. சீவன் முக்தராக ஒருவர் ஆகி, அவரது அறியாமையும், சீவனும் நீங்கி, சிவமாக அவர் ஆகி விட்டால், மற்றவர்களுக்கும் அவ்வாறு அறியாமையும், சீவனும் நீங்கி முக்தர்களாக மாறி விடுவதில்லை.

இதிலிருந்து, இந்த இருபத்து எட்டு தத்துவங்களும் அவரவர்களுக்கு தனித்தனியாக மட்டுமே இருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

இந்த தத்துவங்கள் முப்பத்து ஆறில், எப்போதும் தானாகவே காணப்படுகின்ற தத்துவம் ஒன்று.

எப்போதும் தனக்கு அந்நியமாகக் காணப்படுகின்ற தத்துவங்கள் ஏழு.

தான் ஆகவும், தனக்கு அந்நியமாகவும் அனுபவிக்கப் படுகின்ற தத்துவங்கள் இருபத்து எட்டு.

அவைகள் எப்படி எனில்,

அவஸ்தாத் திரய சாட்சியாக இருக்கின்ற பிரம சைதன்யம், எல்லாவிதமான அறியாமைகளிலும் தானாக விளங்குவதினாலும், மற்ற தத்துவங்கள் போன்று தனக்கு அந்நியமாக விளங்காதபடியினாலும், அந்தப் பிரம சைதன்யம் ஒன்று மட்டுமே தானாகக் காணப்படுகின்றது.

பஞ்ச பூதங்கள் (5), மாயை (1), மாயாப் பிரதி பிம்ப ஈஸ்வரன் (1) ஆக இந்த ஏழு தத்துவங்களும் விவகாரங்களில் ஒன்றுக்கு ஒன்று வேறுபாடுகளுடன் காணப்படுவதினால், அவைகள் தனக்கு அந்நியங்களாக இருக்குமே தவிர, தானாகவே இருக்காது.

மற்ற இருபத்து எட்டு தத்துவங்களுக்குள்ளே நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரம்மச்சாரி, நான் கிருகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் ஆண், நான் பெண்,

நான் அலி, நான் கறுப்பு, நான் சிகப்பு, நான் வெள்ளை, நான் குட்டை, நான் நெட்டை, நான் பருமன், நான் ஒல்லி என்று பலவாறாக இந்த ஸ்தூல உடல் அபிமானத்தினாலே, ஸ்தூல சரீர தத்துவங்கள் ஆறும் உள்ளன.

மற்றொரு வகையிலே, இது என்னுடைய மகன், என்னுடைய மனைவி, என்னுடைய வீடு, என்னுடைய கார், என்னுடைய மாடு, என்னுடைய உடல், என்னுடைய உடல் இளைத்தது, நரைத்தது என்று இந்த உடலை தனக்கு வேறாகவும், தான் வேறாகவும் அபிமானிக்கின்ற பொழுது, நான் கண்டேன், நான் கேட்டேன், நான் தொட்டேன், நான் அனுபவித்தேன், நான் கொடுத்தேன், நான் வாங்கினேன், நான் நடந்தேன், நான் சாப்பிட்டேன், நான் சிந்தித்தேன், நான் பாடினேன், நான் சீவித்தேன் என்று தானாக வழங்குகின்ற சூக்ஷும சரீர தத்துவங்கள் இருபதும், **“நான்”, “எனது”** என்று தனக்கு வேறாகவும், தானாகவும் விளங்குவதால், இந்த இருபத்து எட்டு தத்துவங்களும் தான் ஆகவும், தனக்கு அந்நியமாகவும் வழங்குவது சித்தம்.

இவ்வாறு இதுவரைக் கூறிய குருவைப் பார்த்து, சீடன் கேட்கின்றான்.

சுவாமி!, இந்த இருபத்து எட்டு தத்துவங்களும் தான் ஆனால், சாட்சியைப் போல, ஒரு தன்மையாகத் தோன்ற வேண்டுமே அல்லாமல், பஞ்ச பூதங்களைப் போலத் தனக்கு அந்நியமாகத்தான் தோன்றுகின்றது. இந்த இருபத்து எட்டும், தனக்கு அந்நியமேயானால், எப்போதும் தனக்கு வேறாக

இருக்க வேண்டுமல்லாமல், தான் ஆக இருப்பதுப் போன்று தோன்றக்கூடாது.

தானுமாய், தனக்கு அந்நியமாய் இருக்குமென்பது எப்படி இருக்கின்றது தெரியுமா? இருட்டான சூரியன் என்றும், வெள்ளா தீக்ஷிதன் என்றும் இருப்பதுப் போல உள்ளது என்று சீடன் சந்தேகம் கேட்கவே, குருவானவர் தக்க பதிலைப் பின்வருமாறு தருகின்றார்.

சீவர்களுக்கு பரமாத்ம தத்துவமாக இந்த ஆன்மாவின் அடிப்படையிலே ஒரு **“நான்”** என்றும், அறியாமையினாலே இந்த உடலை நான் என்று கருதுவதின் அடிப்படையிலே ஒரு **“நான்”** என்றும் என இருவகைகள் உண்டு.

இதிலே, சாட்சி சைதன்யத்தை **“நான்”** என்று அபிமானிப்பது, பரமார்த்தம் அல்லாமல் வெறும் உபசாரம் அல்ல.

அதுவே, தனக்கு அந்நியமாக இருக்கின்ற இந்த இருபத்தெட்டு தத்துவங்களையும் **“நான்”** என்று அபிமானிப்பது, கட்டையைப் பார்த்து கள்வன் என்றும், கயிற்றைப் பார்த்து பாம்பு என்றும், தன் குழந்தைகளைப் பார்த்து, தான் என்றும் எண்ணுகின்ற மயக்கமே அல்லாமல் உண்மை அல்ல.

ஆகவே, அறியாமையின் காரணமாக நம் மீது ஏற்றி வைத்துக் கொண்ட இந்த தத்துவங்கள் எல்லாம் உண்மை அல்ல என்பது விவேகம் உண்டானவுடன், அவைகள் **“நான்”** அல்ல என்ற உண்மை விளங்குகின்றது.

எவ்வாறு, ஒரு குடத்தைப் பார்க்கின்றவன், குடத்திற்கு வேறாக இருந்து அந்த குடத்தை பார்க்கின்றதுப் போல, அந்த முப்பத்தைந்து தத்துவங்களை தனக்கு வேறாக முப்பத்து ஆறாவது தத்துவமாக இருந்து, அவைகள் அனைத்தையும் அறிகின்ற அதுவே **“நான்”** என்றும், அதுவே பரமசிவம் என்றும், கலக்கமறத் தெளிந்தவனே சிவதரிசனம் உடைய **“சீவன் முக்தன்”** என்று சொல்லப்படுகின்றான்.

இப்படிப் பிரம்மமே **“நான்”** என்றும், மற்ற முப்பத்தைந்து தத்துவங்களும் தனக்கு அந்நியம் என்றும், பிரித்து அறியாத விவேகமற்றவர்கள், தங்கள் மீது ஏற்றி வைத்துக் கொண்ட பல்வேறு அறியாமைகளின் காரணமாக, அஹங்காரத்தின் உச்சத்தில், இந்த இருபத்தெட்டு தத்துவங்களின் தொழில்களை தன் தொழில்கள் என்று மயங்குகின்ற காரணத்தினாலே, இந்த இருபத்தெட்டு தத்துவங்க ளினால் ஆக்கிரமிக்கப்பட்ட புண்ணிய, பாவங்களினால் கட்டுப்பட்டு, அந்தக் கர்மத்தின் படியே பிறப்பு, இறப்பு என்ற சம்சாரத்திலே அடிபடுகின்றோம் என்று மயங்குகின்றனர்.

அந்த பிரம்ம சைதன்யமே **“நான்”** என்றும், மற்றைய முப்பத்து ஐந்து தத்துவங்களும் தான் அல்ல என்றும் தெளிந்த

விவேகியானவன், அஹங்காரம் அற்று, இந்த இருபத்தெட்டின் உடைய தொழில்களையும் நான் செய்யவில்லை என்றும், புசிக்கின்றதை நான் புசிக்கவில்லை என்றும், திடமானதினால், மயக்கமற்று இருக்கின்றபடியினால், இந்த இருபத்தெட்டினாலும் ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட பாவ, புண்ணியங்களிலிருந்து விடுபட்டுக் கர்மம் இல்லாததினாலும், பிறப்பு, இறப்பு என்ற சம்சாரம் இல்லாமல், முக்தனாக, பிரம்மமாகவே இருக்கின்றான்.

இவனைதான் சீவன் முக்தன் என்றும், **திடப் பிரக்ஞன்** என்றும், பிரம்மச்சரியம், இல்லறம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்ற வர்ணாஸ்ரம பேதங்களைக் கடந்த **அதிவர்ணாஸ்ரமி** என்றும், சத்துவகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்ற மூன்று குணங்களையும் கடந்த **குணாதீதன்** என்றும், **பகவதபக்தன்** என்றும், பிரம்மத்தை அறிந்துக் கொண்டதினால் **பிராமணன்** என்றும் **'ஞான வாசிஷ்டம்'** போன்ற சாஸ்திரங்கள் கூறுகின்றன. எனவே, அனைவரும் இந்த தத்துவங்களை விசாரம் செய்து, என்றும் நிலையான சந்தோசத்தை தருகின்ற மோக்ஷத்தை அடைய வேண்டும்.

**நாநா சீவ வாதக் கட்டளை நிறைவடைந்தது.**

# நாநா சீவ வாதக் கட்டளை

தவத்திரு சேஷாத்திரி சிவனார் அருளியது



எளிய தமிழ் விளக்கம்

சுவாமி பிரபஞ்சநாதன்